கட்டாவ் கல்–பனையிலே...மோகன வர்ணஜாலப் புதுயுகம்.
ஆயிரம் அகலிகைகளின் மறுமலர்ச்சி நாடி துடிக்கும் வாழ்வின்
நடனச் சித்திரம். நேசவிலே ஆந்ம நிம்மதி.
கற்ப காலம் வாழும் டெரிகோஸா கற்பனைக் கோல வரிசை.
ஒற்றுமை உணர்வின் உருவகம்.





**கட்டாவ்**
டெரிகோஸா சேலைகள்
'டெரிவ'

Creative Unit A 1C77



# தீபாவளிக்கு

# ராசி கதம்பம்

## (RASI ASSORTMENT)



வித்விதமான கலர்கள்
புதிய டிசைன்கள்

# 10%

## விசேஷ தள்ளுபடி



ராதா சில்க் எம்போரியம்
சென்னை-600004

ராதா சில்க் எம்போரியம்
29, கோவிந்த் மஹல்,
86-B, மரைன் டிரைவ், G.ரோடு,
பம்பாய்-400002

சார்பு நிறுவனம்: ராதா சில்க்ஸ்
'தன் பில்டிங்ஸ்' மவுண்ட் ரோடு,
சென்னை-600002

ராதா சில்க்கின் 'ராசி'
உன்னத வாழ்வுக்கு ஆசி

தீபாவளி வெளியீடான
டைரக்டர் K. பாலசந்தரின்
''அவன் ஒரு தொடர்கதை''
திரை ஓவியத்தில் ஸ்ரீப்ரியா

தீபாவளி வரை,
ஞாயிற்றுக்கிழமைகளிலும்
விற்பனை உண்டு.

EP-RASI-89

RP. 7321

பெண்கள் என்றாலே
சில தினங்களில்
அசௌகரியமும் வலியும்
ஏற்படுவது சகஜம்.
ஒரே ஒரு ஸாரிடான்
இவற்றிலிருந்து
நிவாரணமளிக்கிறது

'சோர்வுண்டாகும்' அந்நாட்களில் வலியினாலும் தளர்ச்சியினாலும் தனிமையில் நீங்கள் வேதனைப்படும்போது உங்களுக்குத் தேவை ஸாரிடான். ஸாரிடானின் தனிப் பட்ட கலவைமுறை மட்டுமே உங்களுக்கு நிவாரணமளித்து, சோர்வை நீக்கிப் புத்துயிரளிக்கிறது. ரோஷின் சர்வதேச ஆராய்ச்சியின் விளைவு இங்கு செயல்படுகிறது.



# ஸாரிடான்

ட்ரேட்மார்க் 'ரோஷ்'




# உங்களுக்காக பிலிப்ஸ் வழங்கும் இந்த அபூர்வமான மியூஸிக் ஸிஸ்டம் பல அரிய சிறப்புகள் கொண்டது...




OSM 3464 TH

## இந்த பிலிப்ஸ் ஜீஎஃப் 533 செய்து காட்டுவதை வேறெந்த ரெகார்டு பிளேயரும் செய்யமுடியாது.

**மெயின்ஸ்- பாட்டரி ஸிஸ்டம் ஜீஎஃப் 533**



இதில் மோனோ இசைத்தட்டு ஒலி பிரமாதமாக இருக்கும்; ஸ்டீரியோ கூடத்தான். இது ஸ்டீரியோ கார்ட்ரிஜ் மற்றும் அவுட்புட் வசதி கொண்டது. இதை உங்கள் ரேடியோவுடன் இணைத்துப் பாருங்கள். என்ன ஆச்சரியம்! இதோ ஸ்டீரியோ தயார்.



ஸ்டீரியோவாகவும் மாற்றிக்கொள்ளலாம்

இதை நேரடியாக டேப்-ரெகார்டிங் செய்யவும், பதிவு செய்ததைத் திருப்பிக் கேட்கவும் பயன்படுத்தலாம். மோனோ, ஸ்டீரியோ, இரண்டுமே!

மெயின்ஸில் இயக்குங்கள்; அல்லது பாட்டரிகளில். மின்விசை நின்று விட்டால், இது தானாகவே பாட்டரிகளில் இயங்குகிறது.



இது எப்பொழுதும் ஒரு நிலையான வேகத்தில் இயங்குகிறது என்பதை கவனம். இதை உறுதிப்படுத்துகிறது விசேஷ 'எலெக்ட்ரானிக் ஸ்பீட் கவர்னர்'

இசைத்தட்டின் ஒலி முடிந்ததும், இது தானாகவே நின்றுவிடுகிறது. இது மட்டுமா? இதில் வால்யூம் மற்றும் தொனிக் கட்டுப்பாடுகளும், வெவ்வேறு 3-ஸ்பீட்களும் உள்ளன.

இதை வீட்டிலும், வெளியிலும் இயக்கலாம். (இன்பமாகப் பொழுது போக்க, வசதியாக வெளியில் எடுத்துச் செல்லலாம் என்பதை எண்ணிப் பாருங்கள்!)

இதன் அழகிய தோற்றமே உங்களைக் கவர்ந்துவிடுமே! மரம், பாலிஸ்டைரீன் மற்றும் அலங்கார அலுமினியத்தில் அழகான அமைப்பு கொண்டது.

**இத்தனை சிறப்புகளும் கொண்ட பிலிப்ஸ் மெயின்ஸ்-பாட்டரி ஸிஸ்டம் ஜீஎஃப் 533-ஐ, இவ்வளவு குறைந்த விலையில், பிலிப்ஸ் தொழில் நுட்பத் திறன் மட்டுமே உங்களுக்கு வழங்க முடியும்.**

இன்றே உங்கள் பிலிப்ஸ் வியாபாரியைக் காண்க.

# பிலிப்ஸ்

# பினகா ஃப்ளோரைட்* பற்பசை வலிதரும் சொத்தையையும் பற்சிதைவையும் தடுக்கிறது

## ஆகவே நீங்கள் அதை உபயோகிக்க வேண்டும்

**பல் வைத்தியர்களும் ஆராய்ச்சி விஞ்ஞானிகளும் இதை சிபார்சிதம் செய்கின்றனர்**

*"பற்சிதைவைக் காப்பதில் பெரும்பகுதி ஃப்ளோரைட் என்று நமக்கு இப்பொழுது தெரியும். பல் ஆரோக்கிய துறையில் விஞ்ஞான ஆராய்ச்சி தந்த ஒரு பெரும் சாதனை ஃப்ளோரைட்''—

''தி ஜெர்னல் ஆஃப் மெடிகல் லீக்ஸ் (தி மெடிசின் & சர்ஜன் VIII 252-57 பிப். 1967)''.

**பினகா ஃப்ளோரைடினால் பல்துலக்குங்கள் பற்களை உறுதியாக வைத்திருங்கள்**



பினகா டூத் பிரஷ்களிலுள்ள பழக்கப்பட்ட நுனிகள் ஈறுகளுக்கு ஊறு செய்யாது

CIBA

ULKA-CF-33 TM

# ஒவ்வொரு நாளும் உங்கள் சருமம் சிறிது ஈரப்பசை - யையும், சிறிது இளமையையும் இழக்கின்றது.



## புதிய ஜான்ஸன்ஸ்* பேபி லோஷன் ஒவ்வொரு நாளும் ஏற்படுகின்ற அந்த இழப்பை ஈடுசெய்கின்றது.

ஒரு பெண்மணியின் விலையில்லாப் பொக்கிஷம் அவளது சருமம். எனினும், வயதாக ஆக, அதை அழகாகவே வைப்பது கடினமாகும். வருங்காலத்தில் உங்கள் சருமத்தை அழகாக வைக்கவேண்டுமானால், அதை இன்று முதலே நன்று பராமரிக்கவேண்டும். ஆகையால்தான் உங்களுக்குத் தேவை புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன். இந்த விசேஷ அழகு லோஷன் சருமத்திற்கு இன்றியமையாத ஈரப்பசையை நிலை நிறுத்துகிறது.

அதோடு, கடுமையான குளிர் மாதங்களில் உங்கள் சருமத்தை மிருதுவாகவும், இளமையுடனும், அழகொளி வீசும்படியும் வைக்கிறது— ஆண்டு முழுவதும் கூட. எனவே, ஒவ்வொரு காலையிலும் இரவிலும் புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன் உபயோகியுங்கள். உங்கள் முகம், கழுத்து மற்றும் கைகளில் உபயோகித்து, உங்கள் சருமத்திற்குப் பனிபோன்ற புதுமையை அளித்திடுங்கள்.




**புதிய ஜான்ஸன்ஸ் பேபி லோஷன்**

**உங்கள் சருமத்தை மிருதுவாக, இளமை தவழ, அழகொளி வீச வைக்கின்றது.**

# நல்வரவு கூறுகின்றோம்

நெசவின் திறமும், நீடிய உழைப்பும், கலை நுணுக்கமும்
ஒளியும் நிறைந்த காஞ்சிபுரம் பனாரஸ் முதலிய
உயர்தரப் பட்டுப் புடவைகளுக்கும்
கைத்தறி மில் ஜவுளிகளுக்கும்
மிகச் சிறந்த இடம்

## மைலாப்பூர்
# சாந்தி



# சில்க் எம்போரியம்

சென்னையில் புத்தம் புது பட்டு ஜவுளி மாளிகை

5, சன்னதி தெரு, (கபாலீச்வரர் சன்னதி அருகில்) மைலாப்பூர், சென்னை-600 004. போன்: 74403

ஞாயிற்றுக்கிழமைகளிலும் விற்பனை உண்டு.

ரூ. 200/-க்கு மேல் புடவை வாங்கினால் அழகிய பரிசு வழங்குகிறோம்.

மதுரையில் காலேஜ் ஹவுஸில் எங்களது தற்காலிக ஷோ-ரூம் தீபாவளி வரை திறந்து இருக்கும்

Rajathi

## டெட் சலவைக் கட்டி

சோப்பைவிட 1½ மடங்கு அதிக சக்தி வாய்ந்தது எளிதில் நுரைவிடாத நீரிலும்!




## டெட் சலவைப் பவுடர்

பலவித பேக் சைஸ்களில் கிடைக்கிறது. துணிகளை ஊறவைத்து அலசுவதே நீங்கள் செய்யவேண்டியது. கைகளையும் மிருதுவாக வைக்கிறது.




## என்-டெட்

கறை நீக்கும் என்சயம் அடங்கியது சக்தி வாய்ந்தது, ஆனால் கெடுதல் செய்யாதது.




**கண்டதுமில்லை, காணப் போவதுமில்லை–இத்தகைய வெண்மை–பெறவே டெட்டின் தரமான தயாரிப்புகள்!**

Shilpi HPMA 6A/74 Tam

# முதல் குன்றாது திகழ, வட்டி தட்டாது கிடைக்கும்!




## ஆம், இந்தியன் பாங்கின் சீரான வருவாய் டெபாசிட் திட்டத்தில் சேருங்கள்.

ரூ. 12000 டெபாசிட் செய்யுங்கள் — உங்கள் முதல் குன்றாது திகழும்; எனினும் குறித்த நேரத்தில் மாதா மாதம் ரூ. 100/- நீங்கள் பெறலாம்.

பள்ளிக் கட்டணம், மளிகை வாங்கிய பணம் அல்லது வீட்டு வாடகை போன்ற நீங்கள் விரும்பும் செலவினங்களை இதைக்கொண்டு செலுத்தலாம்.

ரூ. 3000 - 30,000 - 60,000 அல்லது எந்த தொகையையும் நீங்கள் டெபாசிட் செய்யலாம்.

**விவரங்களுக்கு எமது கிளைகளுள் ஒன்றில் விசாரிக்கவும்**




**இந்தியன் பாங்க்**

(இந்திய அரசுக்கு முழுதும் சொந்தமானது)

தலைமை அலுவலகம்:

17 வடக்கு கடற்கரை சாலை, சென்னை-600 001

***உங்கள் நலனில் அக்கறை காட்டும் பாங்க்***

# அடுத்த இதழில்



**கல்கி**

ஆனந்த, ஐப்பசி, 10
அக்டோபர் 27, 1974

★

"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்களே; சம்பவங்களும் கற்பனையே.



நகர் வலம்: நமது உதவி ஆசிரியர் ரா. வீழிநாதன் ராய்ச்செட்டிபூருக்கு நேரில் சென்று பல இடங்களைப் பார்த்துப் பலரைச் சந்தித்து எழுதியுள்ள விசேஷக் கட்டுரை.



வெள்ளிக்கிழமை விரதம் திரைப் படத்தில் அற்புதமாக நடித்திருப்பது ஒரு பாம்பு. அதைப் பழக்கி நடிப்பும் சொல்லித் தந்த ஜனுப் மோடி மஸ்தான் தமது அபூர்வமான தொழில் பற்றிப் பேசுகிறார்.



டோக்கியோ, ஹாங்காங், பாங்காக் ஆகிய ஆசியத் தலைநகரங்களில் ஸ்ரீ சதாசிவம், ஸ்ரீமதி எம். எஸ். சுப்புலக்ஷ்மி மற்றும் இசைக் குழுவினர் அடைந்த அனுபவங்கள்.

| சந்தா விவரம் | ஒரு வருடம் | ஆறு மாதம் |
|---|---|---|
| இந்தியா | ரூ. 30-00 | ரூ. 15-00 |
| இதர நாடுகள் | ரூ. 60-00 | ரூ. 30-00 |
| இலங்கை (இலங்கை நாணயம்) | ரூ. 44-00 | ரூ. 22-00 |

கல்கி

மலர் 34

இதழ் 13



தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

# சிறப்பு முக்கோணம்!

ஒரு நாட்டின் வளத்துக்கு இன்றியமையாதவை விவசாயச் செழிப்பு, தொழில் வளர்ச்சி, நிலையான பொருளாதாரம். இம் மூன்றும் முக்கோணத்தின் மும்முனைகள் எனலாம். எந்த ஒரு முக்கோணத்தின் மூன்று கோணங்களைக் கூட்டினாலும் நூற்று எண்பது டிகிரி வரும் என்ற சூத்திரம்போல் இந்த மூன்று அம்சங்களையும் பேணினால் சுபிட்சம் நிச்சயம்.

கடந்த பல ஆண்டுகளாக இம்மூன்று துறைகளிலும் தவறுகள் பல நேர்ந்துவிட்டன. பாரத மக்கள் சொல்லொணாக் கஷ்டங்களுக்கு ஆளாகியிருக்கிறார்கள்.

தவறுகள் நேர்ந்துள்ளதை இந்திரா அரசு புரிந்து கொண்டு புதிய சிந்தனைகளுக்கு இடமளிக்க முன்வந்துள்ளதாகத் தோன்றுகிறது. அதற்கு முதற்படியாக அமைச்சரவை மாற்றங்கள் நிகழ்ந்துள்ளன. முக்கியமான பொறுப்புக்கள் மூன்றையும் ஏற்றுள்ள மும்மூர்த்திகள் அண்மையில் தெரிவித்துள்ள கருத்துக்களும் உற்சாகம் அளிப்பவவாக இருக்கின்றன.

புதிய புதிய தொழிலகங்கள் ஏற்படுவது ஒருபுறமிருக்கட்டும்; இருக்கிற தொழிலகங்கள் அவற்றின் முழுத் திறனையும் பயன்படுத்த முடியாதிருப்பதை மன்னிக்கவே முடியாது என்கிறார் டி. ஏ. பை. அதற்கு இருக்கும் இடையூறுகளை நீக்க அரசு முழுமூச்சுடன் முனையும் என்று கூறியுள்ளார். கச்சாப் பொருள் இல்லாமையா, போக்குவரத்துத் தட்டுப்பாடா என்ன காரணங்கள் என்று ஆராய்ந்து அபிவிருத்தி காண ஒரு விசேஷக் குழுவை நியமித்துள்ளார். இது ஒருபுறமிருக்க உற்பத்தியை அரசு நியமித்துள்ள அளவுக்கு அதிகமாகப் பெருக்குவதுகூட பெர்மிட் லைசென்ஸ் ஆட்சியில் குற்றமாகக் கருதப்படுகிறது. இது போன்ற அபத்தச் சட்டங்களை அகற்றி, முட்டுக்கட்டைகளை நீக்கி, சிவப்பு நாடாக்களைக் கத்தரித்துத் தொழில் துறையின் பலவீன நிலைக்குக் 'குட்பை' சொல்வார் டி.ஏ.பை, என எதிர்பார்க்கிறோம்.

உணவுத் துறையில் பற்றாக்குறை மனோபாவத்தை மாற்ற வேண்டியதை முதல் கடமை எனக் கருதுகிறார் ஜகஜீவன்ராம். பதுக்கல்காரர்கள் மீது தொடுக்கப்படும் போர் தீவிரமடையும் என்று கூறியவர் பிரத்தியட்ச நிலையையும் உணர்ந்தவராய் உணவு தானிய இறக்குமதியைத் தேவையான அளவு அனுமதித்துவிட வேண்டும் என்று பேசியுள்ளார். இதையடுத்து உணவு உற்பத்தியைப் பெருக்குவதிலும் அவர் தீவிர கவனம் செலுத்தி வருகிறார். சுதந்திரமாகச் செயல்பட உரிமை கோரியிருப்பதைப் பார்த்தால் சட்டைக் கைகளை மடித்து விட்டுக் கொண்டு அவர் 'கோதா'வில் இறங்குவார் போல்தான் தெரிகிறது!

நிதி அமைச்சர் சி. சுப்பிரமணியம் அவர்கள் பேச்சிலும் யதார்த்த நோக்கு காணப்படுகிறது. கள்ளக் கடத்தல், பதுக்கல் வியாபாரம் பற்றிய வழக்கமான புராணம் தவிர தொழில்களுக்குக் கடன் வழங்குவதில் உள்ள கட்டுப்பாடுகள் பற்றி மறு பரிசீலனை செய்யப் போவதாகக் கூறியிருப்பது கவனத்துக்குரியது. கடன் வசதிகளில் கடுமையான கட்டுப்பாடுகளாலும் வட்டி விகிதங்களின் அபரிமித உயர்வாலும் தொழில்துறை இன்று திணறிக் கொண்டிருக்கிறது. இது போன்ற இன்னும் பல பொருளாதாரக் குளறுபடிகளை அமைச்சர் நீக்கி மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் பொருளாதாரத்துக்குப் புனர்வாழ்வு தர வேண்டும்.

அற்புதங்கள் நிகழும் என்று யாரும் எதிர்பார்க்கவில்லை. நோய் முற்றியபின் பெரிய டாக்டரிடம் போவது போன்ற நிலையில் தேசப் பொருளாதாரம் இன்று உள்ளது என்பது அனைவருக்கும் தெரியும். என்றாலும் புதிய டாக்டர் குழாத்திடம் தேசம் நம்பிக்கை வைத்திருக்கிறது.

நாடு வைத்திருக்கும் நம்பிக்கை நலிய வேண்டாம்; அமைச்சர்களின் பேச்சுக்கள் ஆரம்ப சூரத்தனமாய் அமையவும் வேண்டாம்!

# என்ன சேதி?

## சிறந்த கலைஞர்

பரத நாட்டியக் கலைக்கு அருந்தொண்டாற்றி வந்தவர் கே. என். தண்டாயுதபாணிப் பிள்ளை அவர்கள். அவருடைய நாட்டியப் பள்ளியில் பயின்றவர்கள் ஏராளமானவர்கள். அவர்களில் பிரசித்திபெற்ற சிலரைக் குறிப்பிட்டுச் சொல்லலாம்: வைஜயந்தி மாலா பாலி, ஸ்ரீவித்யா, ஜயலலிதா, மஞ்சுளா, லதா. பிள்ளை அவர்கள் பல நடனக் குழுக்களுடன் கடல் கடந்து சென்று பாரதத்தின் பழங்கலைச் செல்வமாகிய பரதக் கலையின் சிறப்பைப் பரப்பியவர்.



பழம்பெரும் நட்டுவனாரான பந்தணை நல்லூர் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களிடம் பயிற்சி பெற்ற தண்டாயுதபாணிப் பிள்ளை, லெப்பதிகாரம், சிவகாமியின் சபதம், காவேரி தந்த கலைச் செல்வி முதலிய நடன நாடகங்களையும், சில குறவஞ்சி நாடகங்களையும் அரங்கேற்றிப் புகழ் பெற்றவர். ஆரம்ப காலத்தில் கலாக்ஷேத்திராவில் சில காலம் இருந்தார். தமிழ்நாடு சங்கீத நாடக சங்கம் 1968ல் 'கலை மாமணி' என்ற பட்டம் வழங்கிக் கௌரவித்தது. 1971ம் ஆண்டில் பாரத சர்க்காரின் 'பத்மஸ்ரீ' விருது வழங்கப்பட்டது. பல தமிழ்ப் படங்களில் நடனக் காட்சிகளை இயக்கிச் சிறப்பித்தவர். தண்டாயுதபாணிப் பிள்ளையின் மறைவினால் கலை உலகம் களையிழந்து போயிருக்கிறது.

## செம்பை

கலை மாமணி ஒருவர் மறைந்த செய்தியை அடுத்துச் சங்கீத கலாநிதி ஒருவர் காலமான செய்தியும் கிடைத்திருக்கிறது.

கர்நாடக சங்கீத மேடையில் பல ஆண்டுகளாகக் குன்றாத புகழுடன் விளங்கி ரசிகர்களை மகிழ்வித்து வந்த செம்பை திரு வைத்தியநாத பாகவதர் உற்சாக புருஷர். கச்சேரிகளின் போது பக்கவாத்தியம் வாசிப்பவர்களையும் ரசிகர்களையும் அந்த உற்சாகம் பற்றிக் கொள்ளுமாறு செய்வார். ஆனால் அதற்காகப் பந்ததி மாற மாட்டார்; இசையில் எப்படி சம்பிரதாய சுத்தத்தைக் கடைப்பிடித்தாரோ, அப்படியே வாழ்க்கையிலும் பரம சுத்தமான மனிதராக விளங்கினார். வெண்கலக் குரல் என்பதாக வர்ணிக்கப்பட்ட கணீரென்ற குரலையும் தங்க மனம் என்பதாக வர்ணிக்கப்பட்ட குண நலன்களையும் கொண்டிருந்தார். எளிய வாழ்வை விரும்பி மேற்கொண்ட பரோபகாரி. யாருக்கும் ஒரு தீங்கும் கனவிலும் நினைக்காத நல்ல ஆன்மா.



இவற்றுக் கெல்லாம் அடிப்படையாக அமைந்தது அவரது இறையுணர்ச்சி. குருவாயூரப்பனிடம் அளப்பரிய பக்தி பூண்டவர். இடையில் ஒரு முறை சாரீர சுகத்தை இழந்து பின்னர் குருவாயூரப்பன் அருளால் திரும்பப் பெற்றதாக அவரே கூறியிருக்கிறார்.

இளம் பாடகர்களையும் இதர கலைஞர்களையும் ஊக்குவித்துப் பிரகாசிக்கச் செய்வதில் மிகுந்த சிரத்தை எடுத்துக் கொண்டவர் செம்பை.

இத்தனை வயதுக்குப் பிறகும் என்னமாய்ப் பாடுகிறார் என்று பலரும் அதிசயிக்கும் வண்ணம் அண்மையில் சென்னையிலேயே அவர் கச்சேரி ஒன்று கிட்டத்தட்ட நாலு மணி நேரத்துக்கு நடந்தது.

இசைக்காகவே வாழ்ந்து அதை இறைவனுக்கே அர்ப்பணித்தவர் ஒட்டப்பாலம் கோயிலில் இசையை வழங்கும்போதே குருவாயூரப்பனின் பாத கமலங்களை நாடினார். கடைசியாகப் பாடியது குருவாயூரப்பனைப்

---

ராஜாஜி சிந்தனை

### புரட்சி ஓங்கட்டும்!

இந்த நாடு சீர்கெட்டு நாசமாகாதிருக்க வேண்டுமானால் ஒரு பெரிய புரட்சிக்கு வழி வகுக்க வேண்டும். தார்மிகப் புரட்சி ஒன்றை நாம் உருவாக்கவில்லையானால் மிகப் பெரிய காந்திய சாதனை சரித்திரத்திலிருந்தே மறைந்துவிடும். இந்தப் புரட்சி பண்டையப் பண்பாடுகளுக்கு மீண்டும் மதிப்பளிப்பதாக இருக்க வேண்டும். ஏதோ ஒரு வழியில் பணம் பண்ணியே தீர வேண்டும் என்கிற அழிவுசார்ந்த எண்ணங்களை நீக்கி எளிய வாழ்வுக்கு அடிகோல வேண்டும். பணத்தின் செல்வாக்குக் குறைய வேண்டும்.

நம்மை வந்து காக்குமாறு பகவானைக் கதறி அழைப்போம். கஜேந்திரனும் திரௌபதியும் கதறி அழைத்தது போல் மனமுருகி அழைப்போம். தெய்வ பக்தியே நம்மைக் காக்கவல்லது.

ஸ்வராஜ்யா, ஜூன் 29, 1963







பற்றிய சுலோகம். நண்பரின் வீடு திரும்பிய வர் நம்மைப் பிரிந்து சென்றுவிட்டார்.

### வலம்புரி ஜான்

தமிழகத்திலிருந்து ராஜ்யசபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட திரு வலம்புரி ஜான் ராஜ்ய சபை அங்கத்தினராவதற்குரிய வயதை அடையவில்லை என்பதாக 21–4–74 கல்கி இதழில் 'தமிழ் நாட்டிலே...' பகுதியில் நிரன் எடுத்துக்காட்டியிருந்தார். இதனை மறுத்து திரு ஜான் நமக்கு ஒரு கடிதம் எழுதியிருந்தார். ராஜ்ய சபை அங்கத்தினர் என்ற முறையில் அவருக்கு மதிப்பளித்து அதை 5–5–74 இதழில் பிரசுரித்தோம்.

ஆனால் வலம்புரி ஜான் அவர்களுக்குத் தேர்தலின்போது உரிய வயது நிரம்பவில்லை என்றும் எனவே, அவர் ராஜ்ய சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டது செல்லாது என்றும் அண்மையில் தமிழக உயர் நீதி மன்றமே தீர்ப்பளித்து விட்டது.

தவறு செய்வது பலருக்கும் சகஜம். ஆனால் தவறு சுட்டிக்காட்டப்படும்போது ஏற்பது தான் கௌரவம். இந்தக் கண்ணியத்தைத் திரு ஜான் பெற்றிருந்தது தி.மு.க.வின் துரதிர்ஷ்டம்.

### தேர்தல் செலவுகள்

பெங்களூர் நகரிலிருந்து கர்நாடக சட்ட சபைக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட வட்டல் நாகராஜ், சட்டம் அனுமதிக்கும் தொகைக்கு அதிகமாகத் தேர்தலுக்குச் செலவழித்தார் என்பது நிரூபணமாகி அதனால் அவர் தேர்தல் செல்லாது என்று அறிவித்துள்ளது சுப்ரீம் கோர்ட். ஆனால் இதனாலேயே இவரை

## தலையிலே விழும் கல்!



ஒருவன் ஒரு மதத் தலைவரைச் சந்தித்துக் கேட்டான்: "நான் பேரீச்சம் பழங்களைச் சாப்பிட்டால் மதக் கோட்பாடுகளைப் புறக்கணித்தவனாக ஆவேனா?"

"இல்லை" எனப் பதில் வந்தது மதத் தலைவரிடமிருந்து.

"மேற்கொண்டு சிறிது நீரை உட்கொண்டால்...?"

"இதுவும் சட்டத்துக்குப் புறம்பானதல்ல!"

"அதற்கும் மேலும் சிறிது காடி (சஸ்ட்)யைக் குடிக்கிறேனென்றால்?"

"பேஷாக. அதில் ஒன்றும் தவறில்லையே!"

"சரி! பேரீச்சம்பழ மதுவே இம்மூன்று பொருட்களால் செய்யப்பட்டதுதானே; பின் ஏன் மதுவை மட்டும் உட்கொள்ளத் தடை இருக்கிறது?"

மதத் தலைவர் கூறினார்: "கையளவு மண்ணை எடுத்து உன் தலையில் போட்டால் உனக்கு வலி எடுக்குமா?"

"ஒருபோதுமில்லை" - மனிதன் கூறினான்.

"அதன் மேல் நீரைக் கொட்டினால்....?"

"அப்படியும் எனக்கு வலி உண்டாகாது என்று தான் நினைக்கிறேன்."

"சரி! சரியான விகிதத்தில் மண்ணையும் நீரையும் கலந்து பிசைந்து, பிறகு கலவையைக் கட்டி ஒரு செங்கல்லாக மாற்றி அதை உன் தலையில் விட்டெறிந்தால் உனக்கு எப்படி இருக்கும்?"

"என் தலையைப் பிளக்கும்!"

"சரியாகச் சொன்னாய்! பின்னே என்ன? உன் கேள்விக்குச் சரியான பதில் கிடைத்து விட்டது!"

-ராகவ் (நன்றி: புவபாரதி ஆங்கில மாத இதழ்)

---

எதிர்த்து நின்ற காங்கிரஸ் வேட்பாளர் தயாநந்த சாகர் தேர்ந்தெடுக்கப்பட்டதாக ஆகிவிடாது என்பதாகவும் கூறிக் கீழ் கோர்ட் அளித்த ஒரு தீர்ப்பை நிராகரித்துவிட்டது. இதையொட்டி ஜஸ்டிஸ் வி. ஆர். கிருஷ்ணய்யர் படித்த தீர்ப்பில் தேர்தல் செலவுகள் குறைக்கப்பட வேண்டியதன் அவசியம் வலியுறுத்தப்பட்டுள்ளது. பணத்தின் செல்வாக்கினால் வாக்காளர்கள் பாதிக்கப்படாதிருக்கவும் வும் பண பலத்தால் வெற்றி பெறும் வேட்பாளர்கள் ஆட்சியைப் பாதிக்காமல் இருக்கவும் நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும் என்கிறது சுப்ரீம் கோர்ட். வேட்பாளர்கள் அனைவருக்கும் சமவாய்ப்பு கிடைக்க வேண்டுமானால் தேர்தலில் பணத்தின் ஆதிக்கம் நிலவாதபடிக்குச் சட்டதிட்டங்கள் தர்ம நியாயமான முறையில் அமைய வேண்டும் என்கிறது தேசத்தின் மிக உயர்ந்த நீதி மன்றம்.

இதற்கு வழி வாக்காளர்கள் வோட்டுச் சாவடிக்கு வரவேண்டும் என்று எதிர்பாராமல் தேர்தல் அதிகாரிகள் தங்கள் தங்கள் வட்டாரத்தில் வீடு வீடாய்ச் சென்று வாக்குகளைச் சேகரிப்பதுதான் என்றார் ராஜாஜி. இப்படித் தேர்தலை நடத்தும் செலவையும் பொறுப்பையும் அரசாங்கமே ஏற்றுக் கொண்டு விட்டால் அநீதிக்கே இடம் இராது.

இந்த எளிய, உன்னத யோசனையை ஏற்காத வரையில் இந்த ஜனநாயகம் பண நாயகமாகவே இருக்கும்.

## அணுகுண்டு அரக்கன்!

ஏற்கெனவே அணுசக்தி நாடுகளாய் உள்ளவை அமைதிப் பணிக்கு அணுகுண்டு சோதனை நடத்துவதற்கும் இதர நாடுகள் நடத்துவதற்கும் வித்தியாசம் இருக்கிறது என்று கிஸ்ஸிஞ்ஜர் கூறினார். இதற்கு இந்தியாவில் பலத்த எதிர்ப்பு இருந்தது எதிர்பார்க்கக் கூடியதே.

ஆனால் இதனை எதிர்ப்பதுடன் இந்தியாவின் பொறுப்பு தீர்ந்து விடாது. இதைவிடப் பெரிய அளவில் சர்வதேச நோக்கில் மனிதாபிமானத்துடன் நாம் சிந்திக்க வேண்டும்.

அமைதிப் பணிக்கு என்று கூறிக்கொண்டு பல நாடுகளும் அணுகுண்டு சோதனைகள் நடத்த ஆரம்பித்தால் அந்த அமைதிப் பணி எப்போது ரகசியமான யுத்த பணியாக மாறும் என்று கூறுவதற்கில்லை. இதுதான் கவலைக்கிடமான விஷயம். இந்தியா கொடுத்த வாக்கை மீறாதிருக்கலாம். ஆனால் எல்லா நாடுகளுமே இப்படி நடந்துகொள்ளும் என்று எதிர்பார்க்க முடியுமா? அணுகுண்டு தயாரிக்கும் ஆற்றல் எல்லா நாடுகளுக்கும் பரவுவதை வரவேற்க முடியுமா?

அமெரிக்காவிடமிருந்து போதிய அளவு யுத்த தளவாடங்களைப் பெற முடியாது போனால் அணு ஆயுத உற்பத்தியில் தாங்கள் இறங்க வேண்டியிருக்கும் என்று புட்டோ வெளிப்படையாகவே பேசியிருக்கிறார்.

இந்திய விஞ்ஞானிகளோ அமைதிப் பணிக்கு அணுகுண்டு மட்டுமல்ல, ஹைட்ரஜன் குண்டுகூட வெடித்துச் சோதனை நடத்துவோம் என்று மார் தட்டுகிறார்கள்.

இஸ்ரேயில் எகிப்து நாடுகளுக்கு அமெரிக்கா தருவதாக வாக்களித்த மின் உற்பத்திக்கான அணு நிலையங்களைக்கூடக் கொடுப்பதா வேண்டாமா என்று மறு பரிசீலனை நடக்கிறது இப்போது.

இவையெல்லாம் உலக சமாதானத்துக்கான முயற்சிகள் ஒருபுறம் தீவிரமடைகையிலேயே அணுகுண்டு அபாயமும் அதிகரித்து வருவதை உணர்த்துகின்றன.

அமெரிக்காவில் இப்போது சிறு அணுகுண்டுகளை வீட்டிலே குடிசைத் தொழில் போலத் தயாரித்து விடுமளவுக்கு அணு விஞ்ஞானம் வளர்ந்துள்ளது. ரகசியங்கள் அம்பலமாகியுள்ளன.

உலக அபிப்பிராயத்தைப் பொருட்படுத்தாமல் பிரான்ஸ், சீனா, ருஷ்யா, அமெரிக்கா, பிரிட்டன் முதலான வல்லரசுகள் அணுச் சோதனைகளைத் தொடர்ந்து நடத்துகின்றன. இந்தத் தலைமுறைக்கு மட்டுமின்றி எதிர்காலப் பிரஜைகளுக்கும் பெருந் தீங்கு விளைவிக்கக் கூடிய எல்லாவிதமான அணுகுண்டு சோதனைகளுக்கும் முடிவுகட்ட உலகத் தலைவர்கள் முன்வந்தாலொழியச் சிக்கலுக்கு வேறு விடையே யில்லை. இதனை வற்புறுத்துமளவுக்கு இந்தியா தார்மீக பலம் பெறும் வகையில் தன் கொள்கையை மாற்றி அமைத்துக்கொள்ள வேண்டும்.













# சில்வர் ப்ரின்ஸ்

## சுத்தமான, மழமழப்பான க்ஷவரத்தைத் தரும்... உறுதிமொழியை நிறைவேற்றிடும் பிளேடு.




## சில்வர் ப்ரின்ஸ்–சுகமான க்ஷவரம்...சோகுசான க்ஷவரம்

நீங்கள் சில்வர் ப்ரின்ஸ் கொண்டு மழமழப்பாகவும், சுத்தமாகவும் க்ஷவரம் செய்து கொள்ளலாம். ஏனெனில் இறக்குமதியான மிகச் சிறந்த ஸ்டெயின்லெஸ் ஸ்டீலில், இந்தியாவில் அதி முன்னேற்ற-




மான தொழில்நுட்பத்துடன் தயாரிக்கப் படுகிறது சில்வர் ப்ரின்ஸ். நீங்களும் சுகமான க்ஷவரத்தைப் பெறுகிறீர்கள். எனவேதான் சில்வர் ப்ரின்ஸ் முகக்ஷவரத்தை சுகக்ஷவரம் என்கிறோம்.

Grant.5.TM

Prestige

PREETT

# பத்து லட்சத்துக்கும் அதிகமான குடும்பத் தலைவிகள் உபயோகிப்பது பிரஸ்டீஜ்—இந்தியாவில் அதிகம் விற்பனையாகும் பிரஷர் குக்கர்

## காரணம் என்ன?



**அதிகக் கொள்ளளவு:**

பிரஸ்டீஜ் மூடி வெளிப்புறம் பொருந்துவதால் அதிக உணவு சமைக்க நிறைய இடம் கிடைக்கிறது. உள் அடுக்குகள் பெரியவை. காரணம் பிரஸ்டீஜின் கொள்ளளவு வேறு வகை குக்கர்களை விட 1/3 பங்கு அதிகம்.

**அதி வேகம்:**

பிரஸ்டீஜில் உபயோகிக்கப்படும் சிறப்பான அலுமினியக் கலப்பு உலோகம், சீராகவும் விரைவாகவும் சூடு பரவ உதவுகிறது. அதனால் நேரமும் எரிபொருளும் மிச்சம்.

**அதிக பாதுகாப்பானது:**

மூடுவதற்கு இரட்டிப்பு வசதியுள்ள மூடி. மூன்று கட்டங்களில் அமைந்துள்ள பிண்டிலுடன் கூடிய ரப்பர் பாதுகாப்பு அடைப்பான், குக்கரை பாதுகாப்பானதாகச் செய்கிறது.

பிரஸ்டீஜ் 6 அளவுகளில் கிடைக்கிறது. வாழ்நாள் முழுவதும் உழைப்பதற்கு உறுதியளிக்கிறது.

உங்கள் பிரஸ்டீஜ் குக்கர் அதி நுட்பமானது. சிறந்த பயிற்சி பெற்ற பழுதுபார்ப்போர் தான் அதை சீராக்க முடியும். விற்பனைக்குப் பிறகும் உங்கள் பிரஸ்டீஜுக்கு விரைவாகவும் தரமாகவும் சீர்பணி புரிய, நாடெங்கும் 250க்கும் அதிகமான ஸர்வீஸ் ஸ்டேஷன்கள் இருக்கின்றன. பிரஸ்டீஜ்-ப்ரீத் பணி நிலையங்களிலும், விற்பனையாளர்களிடமும், மட்டுமே உத்திரவாதமுள்ள மாற்றுப் பகுதிகள் கிடைக்கின்றன.







டிடி. (பிரைவேட்) லிமிடெட், பெங்களூர் 560016

SAA/TTP/1008 R

## இல்லத்தரசிகளே!

சரியான அளவுகளைத் தெரிந்துகொள்ள உபயோகியுங்கள்

**PREETT ப்ரீத் ஸ்டாண்டர்ட் அளவிடும் கப் மற்றும் ஸ்பூன்கள்**

ஹோம் சயின்ஸ் அசோசியேஷன் ஆஃப் இந்தியாவின் அங்கீகாரம் பெற்றவை. திரவ-திட பதார்த்தங்களை இனி கண் மதிப்பில் அளவிட வேண்டியதில்லை.

எல்லா பிரபல விற்பனை நிலையங்களிலும் கிடைக்கும்.





# சரஸ்வதி

ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி
சங்கராசார்ய ஸ்வாமிகள்

சரஸ்வதி பூஜையானது சரத்காலத்தில் வருகிறது. 'சரத்'காலத்தில் நிகழ்வதால்தான் இந்த நவராத்திரிக்கே 'சாரத' நவராத்திரி என்று பெயர் ஏற்பட்டிருக்கிறது. சாரதா என்ற பெயர் சரஸ்வதி தேவிக்கும் ஏற்பட்டிருக்கிறது.

காச்மீரத்தில் பண்டிதர்கள் அதிகம். 'பண்டிட்' என்றே ஒரு ஜாதியாகச் சொல்வார்கள். மோதிலால் நேரு, ஜவாஹர்லால் நேரு எல்லாருங்கூட இப்படிப்பட்ட 'பண்டிட்'கள்தாம். அங்கே இப்படி வித்வத் கோஷ்டி நிறைய இருந்ததற்குக் காரணம் வாக் தேவியான (வாக்குத் தேவதையான) சரஸ்வதி ஆராதனை காச்மீர மண்டலத்தில் மிக அதிகமாக இருந்ததுதான். அங்கே 'சாரதா பீடம்' என்றே ஒன்று இருந்தது. பாரத தேசத்தின் மகா பண்டிதர்களும் அந்த சாரதா பீடத்தில் ஏறினாலே தங்கள் வித்வத்துக்குப் பட்டாபிஷேகம் செய்தது போல் என்று கருதினார்கள்.

நம் தமிழ்நாட்டில், தொண்டை மண்டலத்தில் இருக்கிற காஞ்சிப் பகுதிக்கும் காச்மீர மண்டலம் என்று ஒரு பெயர் இருந்திருக்கிறது. வடக்கே கிருஷ்ணன் அவதரித்த மதுரை இருந்தால், தெற்கே மீனாக்ஷி அவதரித்த மதுரை இருக்கிறது. அங்கே ஒரு பாடலிபுத்திரம் இருப்பது போலவே இங்கேயும் நடு நாட்டிலே ஒரு பாடலிபுத்திரம் உண்டு: அதுதான் திருப்பாதிரிப்புலியூர். வடக்கே காசியிருப்பது போல் இங்கும் திருநெல்வேலியில் தென்காசி இருக்கிறது. இம்மாதிரி காஞ்சி மண்டலமே தக்ஷிண காச்மீரம். இங்கே சரஸ்வதியின் அருள் விசேஷமாக சாந்நித்தியம் பெற்றிருக்கிறது என்பதை மூகரும் "ஸாரஸ்வத புருஷகார ஸாம்ராஜ்யே" என்கிறார். இந்த மூகருக்கு சாக்ஷாத் காமாட்சியே வாக் தேவியாக வந்து அநுக்ரஹித்த விசேஷத்தால்தான் ஊமையாக இருந்த அவர் மகா கவியானார். காமாக்ஷி ஆலயத்தில் எட்டுக் கைகளோடு கூடிய பரம சுந்தரமான ஒரு சரஸ்வதி தேவிக்குச் சந்நிதி இருக்கிறது. ஆதி ஆசார்யாள் காஞ்சிபுரத்தில் சகல கலைகளிலும் தம் ஞானத்தைக் காட்டி ஸர்வக்ஞ பீடம் ஏறியது, இங்கே ஸ்தாபித்த (காமகோடி பீட) மடத்துக்கு 'சாரதா மடம்' என்றே பெயரிட்டது எல்லாம் காஞ்சிபுரத்துக்கும் சரஸ்வதிக்கும் இருக்கப்பட்ட விசேஷமான சம்பந்தத்தைக் காட்டுகின்றன.

ஆதியிலிருந்தே காஞ்சியில் 'கடிகாஸ்தானம்' என்கிற வித்தியாசாலைகள் நிறைய இருந்திருக்கின்றன. வடக்கே இருந்த நாலந்தா, தக்ஷசீலம் இவைபோல் இந்தக் கடிகா ஸ்தானங்களும் யூனிவர்சிடி போலப் பெரிதாக இருந்திருக்கின்றன. திருவல்லத்துக்கு அருகே உள்ள ஒரு கல்வெட்டில் "கடிகை ஏழாயிரவர்" என்று காண்பதிலிருந்து ஏழாயிரம் வித்யார்த்திகள் இங்கு கல்வி பயின்றதைத் தெரிந்துகொள்ளலாம். மைசூரில் ஷிமோகா ஜில்லாவில் ஷிகார்பூர் என்று ஓர் ஊர் இருக்கிறது. அங்கே பிரணவேச்வரஸ்வாமி ஆலயத்தில் ஒரு மிகப் பழைய கல்வெட்டு இருக்கிறது. அதில் கி. பி. நாலாம் நூற்றாண்டில் கர்நாடகத்தை ஆண்ட மயூரவர்மன் தன் குருவான வீரசர்மனுடன் 'பல்லவேந்திரபுரி'யான காஞ்சி கடிகையில் படிக்க வந்த விஷயம் பிரஸ்தாபிக்கப்பட்டிருக்கிறது. அரக்கோணத்தருகே வேலூர்பாளையத்தில் உள்ள ஒரு சம்ஸ்கிருதக் கல்வெட்டு, இன்று லோகப் பிரசித்தமாயிருக்கிற கைலாசநாதர் கோயிலை நரசிம்ம வர்மா என்கிற ராஜஸிம்ம பல்லவன் கட்டினான் என்று சொல்வதற்கு முன்பாக அவன் காஞ்சிபுரத்திலிருந்த பழைய கடிகையை மீண்டும் நிறுவியதை முக்கிய விஷயமாகச் சொல்கிறது. அப்பர் சுவாமிகளும் "கல்வியில் கரையிலாத காஞ்சி" என்கிறார்.

மூக பஞ்சசதியின் ஆர்யா சதக சுலோகமொன்று காமாக்ஷியை சரஸ்வதியாகவே பாவிக்கிறது. 'விமலபட' என்று அது ஆரம்பமாகிறது. அதாவது மாசு மறுவே இல்லாத தூய வெள்ளைக் கலை உடுத்தியிருக்கிறாள் என்கிறார். காச்மீரம் முழுதுமே இப்படித்தான் வெண்பனி மலைகளால் மூடப்பட்டு சரஸ்வதி மயமாக இருக்கிறது. சரத்காலத்தின் விசேஷமும் இதுதான். 'சரத் சந்திரன்' என்று கவிகள் விசேஷித்துச் சொல்கிற நிலவு இந்தக் காலத்தில்தான் மிகவும் தாவள்யமாக லோகம் முழுவதற்கும் தூய சந்திரிகையை ஆடை மாதிரி போர்த்துகிறது. இந்த சரத்காலத்தில்தான் ஆகாசத்துக்கும் வெள்ளாடை போர்த்தினது போல் எங்கே பார்த்தாலும் வெண் முகில்கள் சஞ்சரிக்கின்றன. 'வித்தை'யும் அவற்றைப் போல் தாபசாந்தியாக, தூய்மையாக இருக்கும்.





# • கண்கவரும் நகர் • பண்புடைய மக்கள் • மாண்புமிகு தலைமை

"காஞ்சிப் பெரியவாள் அனுக்கிரகத்தால் எல்லாம் மங்களகரமாக முடிந்தது. இப்போது எண்ணிப் பார்த்தால் எல்லாம் ஒரு கனவு போலிருக்கிறது. நீண்ட நாள் நினைவிருக்க வேண்டிய இனிய கனவு."

கிழக்காசியச் சுற்றுப் பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு திரும்பிய ஸ்ரீமதி எம். எஸ். அவர்களுக்கு பிரும்மகான சபை, கலாக்ஷேத்திரம், பாரதீய வித்யா பவன், சங்கீத வித்வத் சபை ஆகியன இணைந்து அளித்த ஒரு வரவேற்பு உபசாரத்துக்குப் பதிலளிக்கையில் ஸ்ரீ சதாசிவம் மேற்சொன்னவாறு குறிப்பிட்டார்.

அந்த இனிய கனவைக் கல்கி நேயர்களும் ஓரளவேனும் உணர்ந்து அநுபவிக்க வேண்டும் என்ற ஆவலில் ஸ்ரீமதி ராதா விசுவநாதன் அவர்களைப் பேட்டி கண்டோம். "கல்கி 15–9–74 இதழில், ஆசிய அபிவிருத்தி வங்கியில் பணியாற்றும் திரு சீனிவாசன் ஒரு கட்டுரை எழுதியிருக்கிறார் அல்லவா? அதற்கு அதிகமாக மணிலா வைபவம் பற்றி நீங்கள் ஏதும் குறிப்பிட விரும்புகிறீர்களா?" என்று கேட்டோம்.

"ஓ! பேஷாகச் சொல்லலாம்!" என்று உற்சாகமாக ஆரம்பித்தார் ஸ்ரீமதி ராதா விசுவநாதன். "முதலில் சீனிவாசன் பற்றியே கூறலாம். அவருடன் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தால் 'இவருக்குத் தெரியாத விஷயமே உலகில் இராதோ?' என்ற எண்ணம் யாருக்கும் ஏற்படும். கர்நாடக சங்கீதம் முதல் காம்பியா நாட்டின் அபிவிருத்தித் திட்டம் வரை அவர் எதைப் பற்றியும் விஷய ஞானத்துடன் பேசக்கூடியவரா யிருக்கிறார்."

"இல்லாமலா ஆசிய அபிவிருத்தி பாங்கியில் பிடித்துப் போட்டிருக்கிறார்கள்? சரி, நீங்கள் இந்தியாவிலிருந்து கிளம்பியதிலிருந்து ஆரம்பியுங்கள்" என்றோம்.

"கிளம்பியபோது ஒரே கவலை" என்றார் ஸ்ரீமதி ராதா. "ஒன்று, இரண்டா? பல விதக் கவலைகள்! குழந்தைகளை விட்டுப் பிரிந்து வந்ததில் கவலை, பெட்டியில் உள்ள மிளகுக் குழம்பு கொட்டிக் கவிழாமல் இருக்க வேண்டுமே என்ற கவலை, விருது பெறும் போதும் மற்றக் கச்சேரிகளின்போதும் அம்மாவும் நானும் முத்துச் செட்டியார் கொடுத்த எந்தப் புடவையை எந்தெந்தச் சந்தர்ப்பத்துக்கு உடுத்துவது என்ற கவலை, எல்லா நிகழ்ச்சிகளும் விக்கினமின்றி நடக்க வேண்டுமே என்ற கவலை, அப்பாவுக்கோ பரிசுத் தொகையை எப்படி எந்தெந்த நிறுவனங்களுக்குப் பங்கிட்டுத் தருவது என்ற கவலை!"

இந்தக் கவலைகளெல்லாம் மணிலாவில் விமானம் தரைதட்டும் வரைதான்; அதன் பின்னர் அவர்களுக்குக் கவலைப்பட அவகாசமும் இல்லை, அதற்கு அவசியமும் இருக்கவில்லை!

1. ரமான் மக்ஸேஸே

2. ஸ்ரீமதி மார்கோஸ், தமது ஞாபகார்த்தமாக ஸ்ரீமதி எம். எஸ்.ஸுக்கு அளிப்பதற்காக ஒரு வண்ணப்படத்தில் கையெழுத்துப் போட்டுத் தருகிறார்.

3. கிழக்காசியச் சுற்றுப்பயணத்தை வெற்றிகரமாக முடித்துக் கொண்டு புதுதில்லி சேர்ந்ததும் எடுக்கப்பட்ட படம். விமான நிலையப் பஸ்ஸை விட்டு இரு பெட்டிகளுடன் இறங்கிக் கொண்டிருப்பவர் கல்கி நிறுவனத்தின் பம்பாய்ப் பிரதிநிதி திரு கண்ணன். சதாசிவம் தம்பதி, ஸ்ரீமதி ராதாவுக்குப் பின்னால் நிற்பது காரைக்குடி மணி.

4. சென்னை சங்கீத வித்வத் சபை அரங்கில் நடைபெற்ற பாராட்டு வைபவத்தின்போது திருப்பதி தேவஸ்தானத்தின் மலர் மாலையை ஸ்ரீமதி மணி கிருஷ்ணசாமி ஸ்ரீமதி எம். எஸ். ஸுக்குச் சூட்டுகிறார்.

5. ஸ்ரீமதி இமெல்டா மார்கோஸ் கையெழுத்துப் போட்டுத் தந்த படம்.





மணிலாவில் எடுத்த எடுப்பிலேயே ஸ்ரீமதி ராதாவின் கவனத்தைக் கவர்ந்தது அதன் சூழ்நிலை. கிட்டத்தட்ட கேரள மாநிலம் போன்று வாழை, தென்னை செழித்து வளர்ந்திருந்தன. நகரை விட்டு வெளியே சென்ற சந்தர்ப்பங்களில் கரும்பு, பைன் ஆப்பிள், நெல் வயல்கள் முதலியனவும் கண் களுக்குக் குளிர்ச்சியாக இருந்தன.

"மக்கள் எல்லோரும் முகத்தில் ஒரு குத்து வாங்கிக் கொண்டவர்கள் போல் மூக்கு சப்பையாகக் காட்சி தருகிறார்கள். குள்ள மாகவும் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் மனம் ரொம்ப உயர்ந்தது" என்றார் ஸ்ரீமதி ராதா.

விமானத்தை விட்டு இறங்கியதுமே அதை உணர முடிந்தது. தங்களது முன்னாள் ஜனாதிபதி மக்ஸேஸாய் பெயரால் அமைந்த விருதைப் பெறுகிறவர்களுக்கு மிகுந்த மதிப்பும் மரியாதையும் கொடுத்தார்கள். விருது பெறுகிறவர் எங்கு போனாலும் மெட்ரோகாம் என்னும் போலீஸ் வண்டி ஸைரன் ஊதிக் கொண்டே முன்னால் சென்றது. விருது பெறும் ஒவ்வொருவருக்கும் ஒரு நிகழ்ச்சி நிரல் தயாரிக்கப்பட்டிருந்தது. அதன்படி எல்லாம் நடக்குமாறு கவனித்துக்கொண்டு தேவையான உதவிகளையும் செய்ய ஒவ்வொருவருக்கும் ஒரு காரியதரிசி நியமிக்கப் பட்டிருந்தார்.

பிலிப்பைன் நாட்டவரின் பெருந்தன்மைக்குப் பெரிய உதாரணமாக விருது வழங்கும் விழாவையே குறிப்பிடலாம். ஜப்பானியரால் பிலிப்பைன் நாட்டவர் உலக யுத்தத்தின்போது அடைந்த துன்பம் கொஞ்ச



Sept 1974

To Smt M.S. Subbulakshmi:
Hearing you sing well always is a beautiful uplifting experience for me, both mentally & spiritually. To me & thousands & multitudes of others, you will be a great inspiration!
[illegible]

**வரசித்தி விநாயகர் கும்பாபிஷேகம்**

மீனம்பாக்கம் ''ஹிந்து'' காலனியில் உள்ள ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயத்தில் அமைக்கப்பட்டிருக்கும் நவக்கிரகங்களுக்கு அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் 28-10-74 சோமவாரம் காலை ஐந்து மணிக்கு மேல் ஏழரை மணிக்குள்ளாகத் துலா லக்னத்தில் நடைபெற இருக்கிறது. அக்டோபர் 26, 27, 28 ஆகிய மூன்று தினங்களும் நவக்கிரக ஹோமம், வாஸ்து ஹோமம் முதலிய மகா கும்பாபிஷேக வைபவங்கள் நடக்கின்றன. பக்தகோடிகள் கலந்துகொண்டு நவக்கிரகத் தேவதைகளின் அநுக்கிரகத்தைப் பெறலாம். இந்தத் தெய்விக நற்பணிக்குக் கைங்கர்யம் செய்ய விரும்புவோருக்கு விலாசம் கீழே தரப்படுகிறது:

நிர்வாகிகள், ஸ்ரீ வரசித்தி விநாயகர் ஆலயம், ''ஹிந்து'' காலனி, சென்னை-61.

---

நஞ்சமல்ல. ஆனால் ஜப்பானிய நாட்டு மாதரசி ஒருவருக்கே இவ்வாண்டு சமூகத் தலைமைக்காக மக்ஸேஸ்ஸாய் விருது வழங்கிக் கௌரவித்தனர்!

அம்மாதரசி மிஸ் இசிகாவா விருது பெற்றுக்கொண்டு நன்றி தெரிவிக்கையில் ஜப்பானியர் பிலிப்பைன் நாட்டவருக்கு இழைத்த கொடுமைகளை மனம் விட்டுக் கூறினார். அதை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த மற்றொரு ஜப்பானியப் பெண்மணி அழுதேவிட்டார்!

''இந்த விதமாக விருது வழங்கும் விழாவில் மனிதாபிமானம் போட்டி போட்டுக்கொண்டு பொலிந்ததைப் பார்க்க மெய் சிலிர்த்தது'' என்ற ராதா மேலும் தொடர்ந்தார்:

''அம்மாவும் மற்றவர்களும் எந்த வழியாக வரவேண்டும், எப்படி மேடை ஏறவேண்டும், எங்கு அமர வேண்டும் என்றெல்லாம் ஒத்திகை பார்த்தார்கள். அதைத் தவிர அப்பாவும் ஜாகைக்குத் திரும்பியதும் மறுபடியும் ஒத்திகை நடத்தினார். அம்மா கூறவேண்டிய நன்றியுரையைப் படிக்கச் சொல்லிக் கேட்டார். ஆனால் ஒத்திகை ஏதும் நடத்தாமலே ஒரு விஷயம் ஆச்சரியமளிக்கும் விதமாக நடந்தது!''

வியப்பளித்த அந்த விஷயம் இதுதான்: விழாவுக்கு முன்னதாக மேடையில் பிலிப்பைன் நாட்டுக் கொடிகள் பலவற்றையும் விருது பெறுவோரின் நாட்டுக் கொடிகளையும் வீரர்கள் கொண்டு போய் வைத்தார்கள். யதேச்சையாக ஸ்ரீமதி எம். எஸ். அமரும் நாற்காலிக்கு நேர் பின்னால் நமது தேசியக் கொடி அமைந்தது!

''இதுவும் விருது வழங்கும் மக்ஸேஸ்ஸாய் அறக் கட்டளையின் தலைவரே (ஸ்ரீ மான்யுவல் வி. மனுஹன்) அம்மாவை அவையோருக்கு அறிமுகப்படுத்தியதும் மிகுந்த மன நிறைவைத் தந்தன'' என்றார் ராதா.

மனம் நெகிழச் செய்த நிகழ்ச்சி விருது பெற்றவர்களை மணிலா நகரப் பள்ளி மாணவ மாணவிகள் பாடி மகிழ்வித்ததாகும். அந்நாட்டில் மாணவ மாணவியர் பள்ளி நாட்களிலேயே கலை ஆர்வம் மிக்கவர்களாய்த் திகழ்கிறார்கள். கல்வி தவிர ஏதேனும் ஒரு கலையிலேனும் அவர்கள் தேர்ச்சி பெறுகிறார்கள். அவர்களில் பன்னிரண்டு பேர் இந்தச் சந்தர்ப்பத்துக்கென்றே மிகுந்த பிரயாசைப்பட்டு 'காக்கைச் சிறகினிலே நந்தலாலா' என்ற பாரதியின் பாடலைக் கற்றுக் கோஷ்டி கானமாக ஆதி தாளம் போட்டுக் கொண்டு பாடினார்கள்!

''அம்மா நெக்குருகிப் போனாள். அவள் கண்களில் நீர் பனித்து விட்டது'' என்றார் ஸ்ரீமதி ராதா. ''அதற்கு முன்னால் பட்சிகளின் கானம் என்று ஒரு பிலிப்பைன் தேசப் பாடலையே பாடினார்கள். பட்சிகள் சப்திப்பது போலவே தொனிக்கும் வார்த்தைகளைக் கொண்டிருந்த அந்தப் பாட்டு புதுமையான அனுபவமாக, ரொம்ப ரசிக்கும்படியாக இருந்தது.''

''பிலிப்பைன் மக்களைப் பற்றி ஓரளவு புரிந்து கொண்டோம்; மணிலா நகரைப் பற்றிச் சொல்லுங்கள்'' என்று ஸ்ரீமதி ராதாவிடம் கேட்டோம்.

''ரொம்ப அழகான நகரம், மிக சுத்தமான நகரம். கடற்கரையோரமாக நடைபாதைக்கருகே நீளப் புல்தரை மரகதப் பச்சையில் கம்பளம் விரித்தாற் போலிருக்கிறது. டாக்ஸிகளும் ஆட்டோ ரிக்ஷாக்களும் பெரிய பஸ்கள் தவிர எட்டுப் பேர் அமர்ந்து செல்லும் ஜிட்னி பஸ்களும் உண்டு. அவையெல்லாம் விதம் விதமான வர்ணங்கள் பூசப்பட்டு ஒரு கோலாகல உணர்வைச் சதா ஏற்படுத்துகின்றன. மக்களின் உற்சாக மனப்பான்மையைப் பிரதிபலிப்பதாக இது இருக்கிறது. நம்பினால் நம்புங்கள், நம்பாவிட்டால் போங்கள். இத்தகைய அழகிய ஆனந்த நகரத்தின் மேயர் ஓர் இந்தியர்!''

''அடேடே அப்படியா!'' என்று வியப்பும் பெருமையுமாகக் குரல் எழுப்பினோம்.

''ஆமாம். நாற்பது வருஷங்களாகப் பிலிப்பைன் நாட்டில் வாழ்பவர் பகத்சிங். இன்று மணிலா நகர மேயராக விளங்குகிறார். மணிலாவில் வேறு பல இந்தியர்களும் வசிக்கிறார்கள். நாங்கள் ஹரிஹரனின் விருந்தினராகத் தங்கியிருந்தோம். அவரும் ஆசிய அபிவிருத்தி பாங்கில் பணியாற்றுபவர். எங்களிடம் ஹரிஹரன் குடும்பத்தினர் காட்டிய அன்பை மறக்கவே முடியாது. அதிலும் அவர்கள் வீட்டில் பணியாற்றும் பிலிபினோ பெண்மணி ஸ்னீதா தயாரித்தளித்த தமிழக உணவு வகைகளின் ருசி ரொம்ப நாளைக்கு நினைவிருக்கும்'' என்ற ஸ்ரீமதி ராதா மற்றொரு விநோதச் செய்தியும் தெரிவித்தார்: நாம் கோயிலுக்குப் போய்த் தேங்காய் உடைப்பது போல் பிலிபினோ மக்களும் கோயிலுக்குப் போய் அவர்களுடைய பெண் தெய்வத்துக்கு உடைக்கிறார்கள் — முட்டையை! தமிழகத்துக்கும் பிலிப்பைன்ஸுக்கும் உள்ள இன்னோர் ஒற்றுமை: புஷ்பங்கள்.

''கச்சேரிக்குக் கிளம்பும் முன்னர் அம்மா தலைக்குப் புஷ்பம் வேண்டுமே என்று நினைத்தேன். என் எண்பதற்கு முன்னர் எண்ணெயாய் நிற்கும் கண்ணன் பந்து மல்லிப் பூவுடன் எதிரே நின்றான்.

'' 'எங்கே மதுரைக்குப் பறந்து போய் வந்தாயா?' என்று கேட்டேன்.

'' 'இல்லை, இல்லை. இங்கே இதற்குப் பஞ்சமே கிடையாது. பிலிப்பைன் நாட்டின் தேசிய புஷ்பமே மல்லிதான். சம்பகிதா என்று இங்கு இதற்குப் பெயர்' என்றான்.

'' 'உன்னை நினைத்துத்தான் பாரதியார் 'கண்ணன் என் சேவகன்' என்று பாடியிருக்க வேண்டும், போ' என்றேன்.''

ஸ்ரீமதி ராதா வேடிக்கையாக இப்படிக் கூறியிருக்கவே மாட்டார். ஏனெனில் அதில் ரொம்ப உண்மையும் இருக்கிறது. ஸ்ரீ. கண்ணன் சிறுவனாயிருந்தபோது கல்கி நிறுவனத்தில் வந்து சேர்ந்து தகுதியால், திறமையால் படிப்படியாக உயர்ந்து இன்று இதன் பம்பாய் பிரதிநிதியாய் விளங்குகிறார். இந்த ஸ்தாபனத்தில் ஒரு டைரக்டரும் கூட. ஆனால் அந்தப் பெருமைகளையெல்லாம் விட ஸ்ரீ சதாசிவம் தம்பதிக்குச் சின்னச் சின்ன ஒத்தாசைகளைச் செய்வதையே இன்றும் பெரும் கௌரவமாகக் கருதுகிறவர்!

''மணிலாக் கச்சேரி பற்றிக் கூறுங்கள்'' என்று ஸ்ரீமதி ராதாவிடம் கேட்டபோது அவர் மௌனத்தில் ஆழ்ந்து போனார். மீண்டும் ஞாபகப்படுத்தியபோது, ''அந்த அற்புதத்தை எப்படி வர்ணிப்பது என்று புரியாமல்தான் வாயடைத்துப் போயிருக்கிறேன். தமது நண்பர்கள் சிலருக்கு அப்பா ஒரு கடிதம் எழுதியிருக்கிறார். அதைப் பார்த்துக் கொள்ளுங்கள். கல்கி நேயர்கள் எல்லாருமே அப்பாவின் நண்பர்கள்தாமே'' என்று கூறி மேற்படி கடிதத்தின் நகல் ஒன்றை எடுத்துத் தந்தார். அதில் ஸ்ரீ சதாசிவம் எழுதுகிறார்:

''....பிலிப்பைன் நாட்டின் முதல் பெண்மணியும் ஜனாதிபதியின் மனைவியுமான ஸ்ரீமதி இமல்டா மார்கோஸ் கச்சேரிக்கு வந்திருந்தது மிகப் பெரிய கௌரவம் என்று கூறினார்கள். ஸ்ரீமதி இமல்டா அழகும் பண்பும் ஒருருவாகி வந்தது போல் விளங்குகிறார். அவர் முன் வரிசையில் உட்காராமல் வெகு தொலைவில் அமர்ந்திருந்தார். எனவே அவர் இடைவேளையின்போது வேறு அலுவல்களைக் கவனிக்கப் போய் விடுவார் என்று அனைவரும் எண்ணினார்கள். மும்மூர்த்திகளின் மூன்று சாகித்யங்களைப் பாடி முடித்ததும் சுப்புலக்ஷ்மி வேங்கடாசலபதி பற்றிய ஒரு பாடலையும் நான்கு மீரா பஜன்களையும் பாடினாள். இதன் பிறகு ராதா பத்து நிமிஷங்கள் இடைவேளை அறிவித்தாள். ஆனால் சபையில் யாருமே இருந்த இடத்தை விட்டு அசையவில்லை. சுப்புலக்ஷ்மியின் கச்சேரி, ஆரம்பித்த கணத்திலிருந்து இடைவெளியற்ற இறையுணர்ச்சி மிக்க இசைப் பிரவாகமாக அமைந்து சபையினரைச் சொர்க்கத்துக்கே தூக்கிக் கொண்டு போய் விட்டது!

''ராதாவையும் அவள் தாயாரையும் பார்த்தபடி நான் முன் வரிசையில் அமர்ந்திருந்தேன். ராதா இடைவேளையை அறிவித்ததும் நான் ஸ்ரீமதி மார்கோஸுக்கு அறிமுகப்படுத்தப்பட்டேன். அவர் என்னை வரவேற்று நலம் விசாரித்துவிட்டு சுப்புலக்ஷ்மியின் இசையைக் கேட்டது தமது வாழ்நாளின் மகத்தான நேரம் என மொழிந்தார். ஒன்றரை மணி நேரம் என அறிவிக்கப்பட்ட கச்சேரி அதற்கு மேலும் ஒரு மணி நேரம் நீடித்தது. சுப்புலக்ஷ்மியும் ராதாவும் மேடையை விட்டு இறங்கியபோது ஸ்ரீமதி மார்கோஸ் அவர்களை எதிர்கொள்வது போல் முன்னால் மேடையை நோக்கி வந்தார். 'ஆன்மீக ரீதியில் என்னை உயர்த்தி விட்டீர்கள். உங்கள் பாட்டை முடிவில்லாமல் நான் கேட்டுக் கொண்டே இருக்கத் தயார்' என்றார். தொடர்ந்து அவர் தமது இதய ஆழத்திலிருந்து அன்பையும் பாராட்டுக்களையும் கொட்டிக் கொண்டேயிருந்தார். மறுநாள் பகலுணவுக்கு ஜனாதிபதியின் குடியிருப்புக்கு வரச் சொன்னார். ஸ்பானிய பாணியில் அமைந்த அரண்மனை அது. திரும்பிய பக்கமெல்லாம் அழகும் வண்ண அற்புதங்களும் உடையது.

''பகல் 12-30க்கு அரண்மனையில் இருந்தோம். ஸ்ரீமதி மார்கோஸுக்கு இடப்புறத்தில் நான் அமர்ந்திருந்தேன். சுப்புலக்ஷ்மியும் ராதாவும் அவருக்கு எதிரே இருந்தார்கள். நம்முடைய கண்ணனும் அழகர்சாமியும் காரைக்குடி மணியும் விருந்துக்கு அழைக்கப்பட்டிருந்தார்கள். ஸ்ரீமதி மார்கோஸினால் தம்மைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. அந்தராத்மாவிலிருந்து பெருக்கெடுக்கும் ஊற்றாக அவர் கச்சேரி பற்றி மூன்று மணி நேரம் வார்த்தைகளைக் கொட்டித் தீர்த்தார். மறுபடியும் மணிலாவுக்கு வந்து அரண்மனையில் தமது விருந்தினராக நாங்கள் தங்க வேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.''

கடிதத்தைப் படித்துவிட்டு, ''அம்மா ஸ்ரீமதி மார்கோஸிடம் என்ன கூறி விடை பெற்றார்?'' என்று வினவினேன்.

'' 'உங்கள் அன்புக்கு என்ன சொல்லி நன்றி தெரிவிக்க முடியும்?' என்று அம்மா கேட்டாள். அதற்கு ஸ்ரீமதி மார்கோஸ், 'நீ என்ன சொல்ல வேண்டும்? நீ என் இதயத்தில் இருக்கிறாய். அது போதாதா?' என்று கூறிவிட்டாள்.

''அந்தப் பெருந்தன்மையை எண்ணியபடியே நாங்கள் டோக்கியோவுக்கு விமானமேறினோம்'' என்றார் ஸ்ரீமதி ராதா.

**(அடுத்த இதழில்: டோக்கியோ, பாங்காக், ஹாங்காங் அனுபவங்கள்.)**

---

**வருமான வழி !**

அமெரிக்காவில் வருமான வரிக் கமிஷனருக்குக் கடிதம் ஒன்று வந்தது. ஐந்நூறு டாலருக்கான செக்கை அனுப்பியிருந்த அவர், ''எனது வருமான வரிக் கணக்கில் உங்களை நான் ஏமாற்றிவிட்டபடியால் எனக்குத் தூக்கமே வரவில்லை. ஐந்நூறு டாலரை என் கணக்கில் பெற்றுக் கொள்ளுங்கள்'' என்று குறிப்பிட்டிருந்தார். கடிதத்தின் பின் குறிப்பில் கீழ்க் கண்டவாறு எழுதப்பட்டிருந்தது: ''இதற்கும் பிறகும் எனக்குத் தூக்கம் வராது போனால், மீதி ஏமாற்றிய பணத்தையும், விவரங்களையும் அனுப்புவேன்!''

ஆதாரம்: வினோபாய் தகவல்: அம்பா மூர்த்தி



குதூகலமான தீபாவளிக்கு

சாரதாஸின்

பிரமிப்பூட்டும் டிசைன்கள்





ரஜனி பாலா

மனோரஞ்ஜனி

பவிஷ்யராணி



# சாரதா'ஸ்

பட்டுப் புடவைகளுக்கு
நம்பிக்கையான இடம்



தன் பில்டிங்ஸ்,
மவுண்ட் ரோடு, சென்னை-600002.
போன் : 87177

N. S. B. ரோடு,
திருச்சி-620002.
போன் : 7077



தீபாவளி முடிய ஞாயிற்றுக் கிழமைகளிலும்
விடுமுறை நாட்களிலும் விற்பனை உண்டு.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

# சுரங்க வழி

சற்று நேரத்துக்கெல்லாம் மகேந்திர பல்லவர் யோக மண்டபத்திலிருந்து திரும்பி அந்த வீட்டின் வழியாக வெளியே சென்றபோது ஆயனர் சென்று குறுக்கிட்டு வணங்கி, ''பல்லவேந்திரா! இங்கே நாங்கள் வந்த காரியம் ஆகிவிட்டதல்லவா? இனி மண்டபப்பட்டுக்குத் திரும்பலாமா?'' என்று இரக்கமான குரலில் கேட்டார்.

மகேந்திரர் புன்னகையுடன், ''ஆயனரே! சிவகாமியின் அற்புத நடனத்துக்கு இன்னும் நான் வெகுமதிகள் அளிக்கவில்லையே? கொஞ்சம் பொறுத்திருங்கள். மேலும் மண்டபப்பட்டுக்கு நீங்கள் திரும்பிப் போக வேண்டிய அவசியமே இராது. உங்களுடைய பழைய அரண்ய வீட்டுக்கே போகலாம்!'' என்றார்.

ஆயனர் கவலை மிகுந்த குரலில், ''பிரபு! ஒவ்வோரிடத்திலும் ஆரம்பித்த வேலை அப்படி அப்படியே நடுவில் நிற்கிறதே! இந்தத் துரதிர்ஷ்டசாலியின் பாக்கியம் போல் இருக்கிறது. மண்டபப்பட்டில் ஆரம்பித்த திருப்பணியும் அப்படியே நின்றுவிட்டால்..'' என்று கூறி வந்தபோது, மகேந்திர பல்லவர் குறுக்கிட்டு, ''மகாசிற்பியாரே! மனித வாழ்க்கை அற்பமானது. இதில் நாம் ஒவ்வொருவரும் ஆரம்பித்த காரியத்தைப் பூர்த்தி செய்துவிட முடிகிறதா? நான் தொடங்கிய காரியங்களும் எத்தனையோ நடுவில் நின்றுதான் போயிருக்கின்றன. அதனால் என்ன? நமக்குப் பின்வரும் சந்ததிகள் நிறைவேற்றி வைப்பார்கள். அதற்காகக் கவலைப்பட வேண்டாம். மேலும், நமது அரண்மனையில் கூடிய சீக்கிரத்தில் ஒரு கல்யாணம் நடக்கப் போகிறது. அப்போது உம் குமாரி நாட்டியம் ஆட வேண்டியிருந்தாலும் இருக்கும்!'' என்று கூறிவிட்டு, மேலே நடந்துசென்றவர், வாசற்படியண்டை சற்றுத் தயங்கி





நின்று, ''ஆயனரே! உங்கள் விருப்பத்துக்கு விரோதமாக இருக்கும்படி கட்டாயப்படுத்த நான் விரும்பவில்லை. உங்களுக்கு அவசியம் போக வேண்டுமானால், கோட்டை வாசல் கதவுகள் திறந்ததும் போய் வாருங்கள். தேவை ஏற்படும் போது சொல்லி அனுப்புகிறேன்'' என்று கூறிவிட்டு, விரைந்து வாசற்படியைக் கடந்து சென்றார்.

* * *

சக்கரவர்த்தி போனபிறகு, சிவகாமி திடீரென்று தரையில் குப்புறப் படுத்துக் கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள். கமலி அவளுடைய தலையைத் தூக்கித் தன் மடியின் மீது போட்டுக் கொண்டு, ''என் கண்ணே! நீ ஏன் அழுகிறாய்? உனக்கு என்ன காரியம் ஆக வேண்டுமோ சொல்! எந்தப் பாடுபட்டாவது, உயிரைக் கொடுத்தாவது நான் செய்து கொடுக்கிறேன். நீ கண்ணீர் விட்டால் என் நெஞ்சு உடைந்துவிடும் போல் இருக்கிறது!'' என்றாள்.

சிவகாமி மறுமொழி சொல்லாமல் விம்மவே, ''அசடே! நீ எதற்காக அழுகிறாய் என்று எனக்குத் தெரியும். சக்கரவர்த்தி கல்யாணத்தைப் பற்றிச் சொன்னதற்காகத்தானே? அது எப்படி நடக்கும், சிவகாமி? மாமல்லர் உனக்கு வாக்குக் கொடுத்திருக்கும்போது, எப்படி நடக்கும்? இந்த மகேந்திர சக்கரவர்த்தி என்னதான் சூழ்ச்சி செய்தாலும், மாமல்லர் வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்ளமாட்டார். மாமல்லரின் குணம் எனக்கு நன்றாய்த் தெரியும். அவரிடம் இந்தச் சக்கரவர்த்தியின் சூழ்ச்சி ஒன்றும் பலிக்காது!'' என்றாள் கமலி.

சென்ற சில நாட்களாகக் காஞ்சி நகரில் மாமல்லரின் விவாகத்தைப் பற்றிப் பலவித வதந்திகள் உலாவி வந்தன. பாண்டியனைப் புலிகேசியிடமிருந்து பிரிக்கும் பொருட்டு, பாண்டிய குமாரியை மாமல்லருக்குக் கல்யாணம் செய்து கொள்வதாகச் சக்கரவர்த்தி ஓலை அனுப்பியிருக்கிறார் என்று சிலர் சொன்னார்கள். இன்னும் சிலர் வாதாபிச் சளுக்கர் குலத்திலேயே மாமல்லருக்குப் பெண் கொள்ளப் போவதாகப் பிரஸ்தாபித்தார்கள். இதெல்லாம் கமலியின் காதுக்கும் எட்டியிருந்தபடியால், அவளுடைய மனமும் ஒருவாறு வேதனைப்பட்டுக் கொண்டிருந்தது. ஆகையினால்தான் மாமல்லரின் மன உறுதியைப் பற்றி அவ்வளவு வற்புறுத்தி, சிவகாமிக்கு அவள் தேறுதல் கூறினாள்.

ஆனால், சிவகாமி தேறுதல் அடையவில்லை. மாமல்லரின் பெயரைக் கேட்டபிறகு இன்னும் விசித்து அழலானாள். ''இல்லை, அக்கா, இல்லை! மாமல்லர் என்னை வெறுத்துவிடுவார். என்னிடம் அவருக்கு இருந்த ஆசையெல்லாம் விஷமாகிவிடப் போகிறது. அவருக்கு அப்படித் துரோகம் செய்துவிட்டேன் இந்தப் பாவி! முன்னமே ஒரு தடவை அவர் என்னை வீட்டிலேயே இருக்கச் சொல்லியிருக்க, நான் ஊர் சுற்றப் போய்விட்டேன். இப்போது என்னை மண்டபப்பட்டிலேயே இருக்கும்படி சொல்லியிருக்க, இங்கே நாட்டியம் ஆட வந்துவிட்டேன். அக்கா! அவர் பாண்டியனை வென்றுவிட்டு நேரே மண்டபப்பட்டுக்கு வருவார்! வந்து என்னைத் தேடுவார்! அங்கே என்னைக் காணமற் போனால், அவருக்கு எப்படி இருக்கும்? நான் இங்கே புலிகேசிக்கு முன்னால் நாட்டியம் ஆட வந்துவிட்டேன் என்று கேள்விப்பட்டால் அவருக்கு என்னமாய் இருக்கும்? — ஆஹா! இந்தச் சக்கரவர்த்தி என்னை எப்படி வஞ்சித்து விட்டார்!'' என்று விம்மிக் கொண்டே கூறினாள் சிவகாமி.

கமலி சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்திருந்தாள். ''சிவகாமி! இதற்கு ஏன் இவ்வளவு கவலை? கோட்டை வாசல் திறந்ததும் நீ போகலாம் என்றுதான் சக்கரவர்த்தியே சொல்லிவிட்டாரே!'' என்றாள்.

''ஆஹா! அவருடைய சூழ்ச்சி உனக்குத் தெரியாது! எனக்காகவே கோட்டை வாசலை வெகுநாட்கள் வரையில் சாத்தி வைத்திருப்பார், அக்கா! மாமல்லர் இங்கு வந்து சேரும் வரையில் திறக்கமாட்டார்! நீ வேணுமானால் பார்!'' என்று சிவகாமி விம்மினாள்.

''தங்கச்சி! நீ கவலைப்படாதே. கோட்டை வாசல் திறக்காவிட்டால் போகட்டும். நான் உன்னை எப்படியாவது வெளியே அனுப்பி வைக்கிறேன்!'' என்றாள் கமலி.

உடனே, சிவகாமி விம்மலை நிறுத்தி எழுந்து உட்கார்ந்து, ''அக்கா! நிஜமாகத்தானா? அது சாத்தியமா?'' என்று கேட்டாள்.

''நான் மனம் வைத்தால் எதுதான் சாத்தியமாகாது? என்னை யார் என்று நினைத்தாய்? இந்த மகேந்திர சக்கரவர்த்தியின் சூழ்ச்சியெல்லாம் என்னிடம் பலிக்குமா?''

''அக்கா! எப்படி என்று சொல்! எங்களை எவ்



விதம் வெளியில் அனுப்பி வைப்பாய்?'' என்று சிவகாமி பரபரப்புடன் கேட்க, கமலி அவள் காதண்டை தன் வாயை வைத்து, ''சுரங்க வழி மூலமாக !'' என்றாள்.

சிவகாமி, ஏற்கனவே காஞ்சியிலிருந்து வெளியே போக இரகசியச் சுரங்க வழி இருக்கிறது என்று கேள்விப் பட்டதுண்டு. எனவே, இப்போது கரை கடந்த ஆவலுடன், ''சுரங்க வழி நிஜமாகவே இருக்கிறதா? உனக்கு நிச்சயமாய்த் தெரியுமா ?'' என்று கேட்டாள்.

கமலி மீண்டும் இரகசியக் குரலில் கூறினாள்: ''இரைந்து பேசாதேயடி ! மாமாவின் யோக சாதனத்தைப் பற்றிச் சொல்கிறேன் என்றேன் அல்லவா ?. யோகம் என்பதெல்லாம் பொய். தங்கச்சி ! சுத்தப் பொய் ! அந்த மண்டபத்திலே சுரங்க வழி இருக்கிறது! அதற்குள்ளேயிருந்து குண்டோதரன் அடிக்கடி வெளி வருவதை நான் பார்த்



திருக்கிறேன். சக்கரவர்த்திகூடச் சில சமயம்.....''

'' என்ன அக்கா சொல்கிறாய் ? குண்டோதரனா ?''

''ஆமாமடி, தங்கச்சி ! ஆமாம் ! குண்டோதரன் என்று சக்கரவர்த்தியின் ஒற்றன் ஒருவன் இருக்கிறான். சத்ருக்னன் என்று இன்னொருவன் இருக்கிறான். இரண்டு பேரும் பொல்லாத தடியர்கள் ! என்னடி யோசிக்கிறாய் ?''

'' ஒன்றுமில்லை, சொல், அக்கா ! அந்தச் சுரங்க வழி உனக்கு எப்படித் தெரிந்தது ?''

'' அந்த யோக மண்டபத்தின் பக்கம் நான் வரவே கூடாது என்று என் மாமனார் சொல்லியிருந்தார். அதனாலேயே அவருக்குத் தெரியாமல் நான் அடிக்கடி போய்ப் பார்ப்பேன். ஒரு நாள் நான் போய் எட்டிப் பார்த்தபோது, மண்டபத்தின் மத்தியில் இருந்த சிவலிங்கம் அப்பால் நகர்ந்திருந்தது. லிங்கம் இருந்த இடத்தில் ஒரு பெரிய துவாரம் தெரிந்தது. அதற்குள்ளேயிருந்து குண்டோதரன் வெளியே வந்து கொண்டிருந்தான். அப்போது மண்டபத்துக்குள்ளே யார் இருந்தது என்று நினைக்கிறாய் ? என் மாமனாரோடு சக்கரவர்த்தியும் நின்று கொண்டிருந்தார்.''

சிவகாமி சற்றுச் சிந்தித்துவிட்டு, ''கமலி அக்கா! எப்படியாவது அந்தச் சுரங்கத்தின் வழியாக என்னை நீ வெளியே அனுப்பிவிட்டால் உனக்குக் கோடி புண்ணியம் உண்டு. என்றென்றைக்கும் நான் உன் அடிமையாயிருப்பேன் !'' என்றாள்.

''பேச்சைப் பார், பேச்சை ! எனக்கு அடிமையாயிருக்கப் போகிறாளாம் ! அடி பொல்லாத நீலி! நீ இந்த ராஜ்யத்துக்கே இராணியாகப் போகிறாய். எனக்கு அடிமையாகிவிடுவாயா நீ! வாக்குக் கொடுத்துவிட்டு அப்புறம் இண்டாடாதே !'' என்றாள்.

பிறகு, ''ஆகட்டும், தங்கச்சி! கொஞ்சம் பொறுமையாயிரு. அந்த மண்டபத்தின் மத்தியில் ஒரு சிவலிங்கம் இருக்கிறது. அதை இடம் விட்டு நகர்த்தினால் சுரங்க வழி தெரியும். லிங்கத்தை எப்படி இடம் விட்டு நகர்த்துவது என்பதை இன்றைக்கு நாளைக்குள் எப்படியாவது தெரிந்து கொள்கிறேன். ஆனால் நீ இவ்வளவு அவசரப்பட்டு என்ன பிரயோஜனம்? உன் தகப்பனார் உன்னுடன் வருவதற்குச் சம்மதிக்க வேண்டுமே ?'' என்று கமலி கவலையுடன் கேட்டாள்.

''என்னைவிட அவர்தான் வெளியே போவதற்கு அதிக அவசரப்படுவார் ! அதற்குக் காரணம் இருக்கிறது'' என்றாள் சிவகாமி.

அதே சமயத்தில் வாசற்பக்கமிருந்த ஆயனர் அவர்களின் அண்டையில் வந்து ''இன்னும் எத்தனை நாளைக்கு இந்தக் கோட்டைக்குள் அடைபட்டுக் கிடக்க வேண்டுமோ தெரியவில்லை. சிவகாமி! உனக்குத் தெரியுமோ முன்னொரு நாள் அந்தப் பரஞ்சோதி என்கிற பிள்ளையிடம் நாகநந்தி ஓலையைக் கொடுத்து அனுப்பினாரே, அஜந்தா வர்ண இரகசியத்துக்காக ? புலிகேசி மகாராஜாவுக்குத்தான் அந்த ஓலையைக் கொடுத்து

அனுப்பினாராம்! அடாடா! வாதாபி மகாராஜா காஞ்சியில் இருக்கும்போதே இதைச் சொல்லியிருந்தால், நான் அதைச் சளுக்க குல சிரேஷ்டரிடம் கெஞ்சிக் கூத்தாடி அஜந்தா வர்ண இரகசியத்தைப் பற்றிக் கேட்டுத் தெரிந்து கொண்டிருப்பேனல்லவா?'' என்று புலம்பினார்.

''புலிகேசி மகாராஜாவுக்கு அந்த இரகசியம் தெரிந்திருப்பது என்ன நிச்சயம் அப்பா?'' என்று சிவகாமி குறுக்கிட்டுக் கேட்டாள்.

''கட்டாயம் தெரிந்திருக்க வேண்டும், சிவகாமி! புலிகேசியின் இளம் பிராயத்தில் அவர் அஜந்தா மலைக் குகையிலேயே கொஞ்ச காலம் ஒளிந்துகொண்டிருந்தார் என்று கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்றார் ஆயனர்.

அப்போது கமலியும் சிவகாமியும் ஒருவரை ஒருவர் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டார்கள். ஆயனர் மேற்கண்டவாறு பேசப் பேச அவர்களுக்கு உற்சாகம் அதிகமாகிக் கொண்டிருந்தது.

## இருபதாம் அத்தியாயம்

# காபாலிகர் குகை

வாதாபிச் சக்கரவர்த்தி புறப்பட்டுச் சென்று மூன்று நாட்கள் ஆகியும், கோட்டைக் கதவுகள் திறக்கப்படவில்லை.

இதைப் பற்றி நகரில் பல வகை வதந்திகள் உலாவிக் கொண்டிருந்தன. ''ஒப்பந்தப்படி வாதாபிப் படைகள் திரும்பிப் போகவில்லை. மறுபடியும் கோட்டையை நெருங்கி வந்து வளைத்துக் கொண்டிருக்கின்றன!'' என்று சிலர் சொன்னார்கள்.

புலிகேசி வெளியில் போன பிறகு மகேந்திர பல்லவருக்கு ஏதோ ஓலை அனுப்பியிருந்ததாகவும், அதற்கு மறுமொழியை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருப்பதாகவும் சிலர் சொன்னார்கள்.

''வாதாபி மகாராஜாவுக்கு மிகவும் வேண்டியவரான யாரோ ஒரு புத்த பிக்ஷுவை மகேந்திர பல்லவர் சிறையில் வைத்திருக்கிறாராம். அவரை உடனே விடுதலை செய்து அனுப்பாவிடில் மீண்டும் யுத்தம் தொடங்குவேன்!'' என்று அந்த ஓலையில் எழுதியிருப்பதாகச் சிலர் சொன்னார்கள்.

''ஆயனரையும் சிவகாமியையும் என்னுடன் அனுப்பி வைக்க வேண்டும். இல்லாவிடில், யுத்தத்துக்கு ஆயத்தமாக வேண்டும்'' என்று எழுதியிருந்ததாக இன்னொரு வதந்தி உலாவியது.

மகேந்திர பல்லவருடைய ஆட்சிக் காலத்தில் காஞ்சி நகரத்து மக்கள் முதன் முதலாக இப்போதுதான் அவருடைய காரியங்களைப் பற்றிக் குறை கூற ஆரம்பித்திருந்தார்கள்.

''புலிகேசியைக் காஞ்சிக்குள் வரவிட்டதே தவறு!'' என்று சிலர் சொன்னார்கள்.

''அப்படியே நகருக்குள் விட்டாலும் அவனுக்கு என்ன இவ்வளவு உபசாரம்? சத்துரு அரசனிடம் இவ்வளவு தாழ்ந்து போகலாமா?'' என்று சிலர் கேட்டார்கள்.

''அந்த மூர்க்கனுக்கு முன்னால், நம் கலைச் செல்வி சிவகாமியை ஆடச் சொல்லியிருக்க வேண்டியதில்லை. சிவகாமியின் நடனத்தைப் பார்த்துவிட்டுத்தான் புலிகேசி தேன் குடித்த நரியாக ஆகிவிட்டான்!'' என்று வேறு சிலர் அபிப்பிராயப்பட்டார்கள்.

அந்த மாதிரியான நகர மாந்தர் பேச்செல்லாம் கமலி மூலமாக வடிகட்டி வந்து ஆயனரின் காதிலேயும் எட்டியது. அதிலெல்லாம் ஒரே ஒரு விஷயந்தான் ஆயனர் மனத்தில் ஆழமாய்ப் பதிந்தது. அதாவது, வடக்குக் கோட்டை வாசலுக்குக் கொஞ்ச தூரத்தில் வாதாபிப் படையின் தண்டு இன்னும் இருக்கிறது என்பதுதான்.

''வாதாபி மன்னர் புறப்படுவதற்குள் இந்தக் கோட்டையைவிட்டு நாம் வெளியேறிவிட்டால் எவ்வளவு நன்றாயிருக்கும்? அவரை எப்படியும் பார்த்து அஜந்தா வர்ணத்தைப் பற்றிக் கேட்டுவிடுவேனே?'' என்று அடிக்கடி ஆயனர் சொல்லிக் கொண்டிருந்தார். ஒரு தடவை திடீரென்று எதையோ நினைத்துக் கொண்டவர்போல், ''நகரிலிருந்து வெளியே போவதற்குச் சுரங்க வழி ஒன்று இருக்க வேண்டும். அது எங்கே இருக்கிறது என்று தெரிந்தால் போய்விடலாம்!'' என்றார்.

இதைக் கேட்ட சிவகாமி கண்களில் மின்வெட்டுடன், ''நிஜந்தானா, அப்பா! சுரங்க வழி தெரிந்தால் நாம் வெளியே போய்விடலாமா?'' என்று கேட்டாள்.

''போய்விடலாம். நான்கூட அந்தச் சுரங்க வழியில் கொஞ்ச நாட்கள் வேலை செய்திருக்கிறேன். ஆனால், அதற்கு



● நன்னெறி தவறாத வாழ்க்கைக்கும், மாபெரும் புகழுக்கும், வளமான செல்வத்துக்கும் காரணமானவரும், கற்பென்ற உயர் நெறியைக் கண்ணை இமைகாப்பதுபோல் காத்து என்னைக் குழந்தையைப்போல் வளர்த்து கவலையில்லாத வாழ்வைத் தந்த, நான் மனமாரத் தெய்வமென மதிக்கும் என் அன்பு மாமா உயர்திரு எஸ். மலைக்கொழுந்து கவுண்டர் அவர்கள் 2-10-74ந் தேதி இறைவனடி சேர்ந்ததை எண்ணி எண்ணி நாளும் என் குடும்பத்தினரும் தாங்கொணாத துயரத்துடன் தெரிவித்துக்கொண்டு, அவர் ஆத்மா சாந்தி அடைய முருகனைப் பிரார்த்திக்கிறோம்.

முருகன் அடிமை
K. B. சுந்தராம்பாள்

கொடுமுடி
7-10-74

மக்கள், மருமக்கள்
பேரன்கள், பேத்திகள்



திரு ஆர் எல். நாராயண் (பிரதம நிர்வாக அதிகாரி, ஆக்பா-கேவர்ட் இந்தியா லிமிடெட்) 22-9-74 அன்று மறைந்தார். நீங்கள் எங்களை விட்டுச் சென்றுவிட்டீர்கள். ஆயினும், நிர்வாகத் துறையில் தங்களுக்கு இருந்த ஊக்கம் எங்களுடன் எப்பொழுதும் இருந்து கொண்டிருக்கும்.

ஆக்பா-கேவர்ட் இந்தியா லிமிடெட்
சென்னைக் கிளை ஊழியர்கள்





வாசல் எங்கே என்று மட்டும் தெரியாது! அதை எப்படிக் கண்டு பிடிப்பது?'' என்று ஆயனர் ஏமாற்றமான குரலில் கூறினார்.

''அப்பா! நம் கமலி அக்காவுக்கு அந்தச் சுரங்க வழி தெரியுமாம்!'' என்று சிவகாமி மெல்லிய குரலில் கூறியதும், ஆயனர் பரபரப்புடன் எழுந்து கமலியின் அருகில் வந்து அவளுடைய கைகளைப் பிடித்துக் கொண்டு, ''என் கண்ணே குழந்தாய்! உன் தங்கச்சி சொல்வது உண்மைதானா? அப்படியானால் நீ எனக்கு அந்தச் சுரங்க வழியைக் காட்ட வேணும். இந்த உதவியை என் ஆயுள் உள்ளவரை மறக்கமாட்டேன்'' என்றார்.

''ஆகட்டும், சித்தப்பா! ஆனால், சமயம் பார்த்துத்தான் உங்களைச் சுரங்க வழிக்கு அழைத்துப் போக வேண்டும். அங்கே பலமான காவல் இருக்கிறது!'' என்றாள் கமலி.

* * *

மூன்று தினங்களாக அசுவபாலர் அநேகமாக யோக மண்டபத்திலேயே காலங் கழித்து வந்தார். மண்டபத்திலிருந்து அடிக்கடி மணிச் சப்தமும் கலகலத் தொனியும் பேச்சுக் குரலும் கேட்டுக் கொண்டிருந்தன.

நாலாம் இரவு ஜாமத்தில் ஆயனர் தூக்கம் பிடிக்காமல் பலகணியின் வழியாக அரண்மனைத் தோட்டத்தை எட்டிப் பார்த்துக் கொண்டிருந்தபோது, நிலா வெளிச்சத்தில் ஓர் அதிசயமான காட்சியைக் கண்டார். தோட்டத்தின் வழியாக நல்ல ஆஜானுபாகுவான ஆகிருதி உடைய ஒருவரை இரண்டு புறத்திலும் இரண்டு பேர் கையைப் பிடித்து நடத்திக்கொண்டு வந்தார்கள். நடுவில் இருந்தவரின் கண்கள் துணியினால் கட்டப்பட்டிருந்ததாகக் காணப்பட்டது.

இன்னும் சிறிது உற்றுப் பார்த்தபோது, நடுவில் நடந்து கொண்டிருந்த ஆஜானுபாகுவான உருவம் ஒரு புத்த பிக்ஷுவின் வடிவமாகக் காணப்பட்டது. அந்த உருவம் ஆயனருக்கு நாகநந்தியை நினைவூட்டியது. ஒரு வேளை நாகநந்திதானோ அவர்? வதந்தியின் படி இந்தப் புத்தபிக்ஷுவுக்காகத்தான் புலிகேசி இத்தனை நாள் காத்துக்கொண்டிருந்தாரோ? நாகநந்தியை அதற்காகத்தான் சுரங்க வழியாக அனுப்புகிறார்களோ? அப்படியானால் நாகநந்தி போய்ச் சேர்ந்ததும் புலிகேசி புறப்பட்டு விடுவாரல்லவா? — ஆஹா! எப்பேர்ப்பட்ட அருமையான சந்தர்ப்பம் கைநழுவிப் போய்க் கொண்டிருக்கிறது.

நாகநந்திக்கும் புலிகேசிக்கும் உள்ள உருவ ஒற்றுமை ஆயனருடைய மனத்திலும் அப்போது தென்பட்டது. நாகநந்தியடிகள் உண்மையில் யாராயிருக்கலாம்? இவ்விதம் பற்பல எண்ணங்களினால் அலைப்புண்ட ஆயனர் அன்றிரவு தூங்கவே இல்லை.

பொழுது புலரும் சமயத்தில் யோக மண்டபத்திலிருந்து வீட்டுக்கு வந்த அசுவபாலர் ஆயனரைப் பார்த்தார். ''என்ன சிற்பியாரே! இரவெல்லாம் நீர் தூங்கவில்லை போல் இருக்கிறது!'' என்றார். ''ஆம் ஐயா. தோட்டத்திலும் உங்களுடைய யோக மண்டபத்திலும் இரவெல்லாம் ஒரே கலகலப்பாயிருந்ததே. என்ன விசேஷம்?'' என்று ஆயனர் கேட்டார்.



அசுவபாலர், ''கலகலப்பாவது, ஒன்றாவது? ஒரு வேளை நீங்கள் கனவு கண்டிருப்பீர்கள்!'' என்று சொல்லிவிட்டு, ''நண்பரே! ஆனால் ஒன்று உண்மை: நேற்றிரவு யோக சாதனத்தில் நான் ஓர் அபூர்வமான அநுபவத்தை அடைந்தேன். அதை உடனே போய்ச் சக்கரவர்த்தியிடம் சொல்லிவிட்டு வரவேண்டும்'' என்று கூறி விரைந்து வெளியே சென்றார்.

அவர் போய்ச் சில நிமிஷங்களுக்கெல்லாம் கமலி வந்து ஆயனர், சிவகாமி இருவரையும் அவசரப்படுத்தினாள். உடனே மூவரும் இளம்பி அரண்மனைத் தோட்டத்திலிருந்த மண்டபத்துக்குள் சென்றார்கள். மண்டபத்தின் மத்தியில்

இருந்த சிவலிங்கத்தைக் கமலி லாகவமாக அப்புறம் நகர்த்தினாள். லிங்கம் இருந்த இடத்தில் சுரங்க வழியின் படிக்கட்டுக் காணப்பட்டது.

கமலி ஆயத்தமாக வைத்திருந்த தீபத்தை எடுத்து ஆயனரிடம் கொடுத்து, ''சித்தப்பா, சீக்கிரம்!'' என்றாள். ஆயனர் தீபத்தை வாங்கிக் கொண்டு சுரங்க வழியின் படிக்கட்டில் இறங்கினார்.

சிவகாமி கமலியை ஆர்வத்துடன் கட்டிக் கொண்டாள். இருவருடைய கண்களிலும் கண்ணீர் ததும்பிற்று.

''அக்கா! போய் வருகிறேன்!'' என்று தழுதழுத்த குரலில் கூறினாள் சிவகாமி.

''தங்கச்சி! போய் வா! மறுபடியும் காஞ்சிக்குத் திரும்பி வரும்போது



பல்லவ குமாரரின் பட்டமகிஷியாகத் திரும்பி வரவேண்டும்!'' என்று கமலி ஆசி கூறினாள்.

''அக்கா! நான் திரும்பி வரும் வரை எனக்காகச் சின்னக் கண்ணனுக்குத் தினமும் ஆயிரம் முத்தம் கொடு!'' என்றாள் சிவகாமி.

கமலி சிரித்துக் கொண்டே, ''அவன் மூச்சு முட்டிச் சாக வேண்டியதுதான்!'' என்றாள்.

சிவகாமி சுரங்கப் படியில் இறங்கிய போது அவளுடைய உள்ளம் பதைபதைத்தது. மார்பு படபட என்று அடித்துக் கொண்டது. ஒளி நிறைந்த குதூகலமான உலகத்திலிருந்து இருளும் ஐயமும் பயங்கரமும் நிறைந்த ஏதோ பாதாள உலகத்துக்குப் போவது போன்ற உணர்ச்சி ஏற்பட்டது.

அந்த உணர்ச்சியை மனோதிடத்தினால் போக்கிக் கொண்டு ஆயனரின் பின்னால் நடந்தாள்.

இருளடர்ந்த சுரங்கப் பாதையில் ஆயனரும் சிவகாமியும் ஏறக்குறைய ஒரு முகூர்த்த நேரம் நடந்தார்கள். இவ்வளவு நேரமும் அவர்களுக்குள் அதிகமான பேச்சு ஒன்றும் நடைபெறவில்லை.

அடிக்கடி ஆயனர் நின்று சிவகாமியின் கையைப் பிடித்து, ''இனி அதிக தூரம் இராது, அம்மா! சீக்கிரம் வழி முடிந்துவிடும்!'' என்று தைரியப்படுத்திக் கொண்டு போனார்.

ஒரு முகூர்த்த நேரத்துக்குப் பிறகு, திடீரென்று வெப்பம் மாறி ஜில்லிப்பு உணர்ச்சி ஏற்பட்டது.

''அம்மா, சிவகாமி! கோட்டைக்கு வெளியே வந்துவிட்டோம். அகழியைக் கடக்கிறோம்!'' என்றார். ஒரு கணம் அங்கே நின்று, ''குழந்தாய்! இங்கே தான் நான் வேலை செய்ததாக ஞாபகம் இருக்கிறது. அகழித் தண்ணீர் உள்ளே வராமல் வெகு சாதுரியமாக இங்கே வேலை செய்ய வேண்டியிருந்தது. அதோடு இல்லை; ஏதாவது ஆபத்துக் காலங்களில் இந்தச் சுரங்க வழியை மூடிவிடவும் இங்கேதான் உபாயம் இருக்கிறது. அதோ பார்த்தாயா? அந்த அடையாளமிட்ட இடத்தில் ஒரு கல்லை இலேசாகப் பெயர்த்தால், அகழி ஜலம் கடகடவென்று உள்ளே புகுந்து விடும். அப்புறம் வெளியிலிருந்தும் உள்ளே போக முடியாது. உள்ளேயிருந்தும் வெளியே போக முடியாது!'' என்றார்.

''நல்ல வேளை! அப்படி ஏதாவது ஏற்படுவதற்கு முன்னால் நாம் வெளியே போய்விடுவோமல்லவா?'' என்றாள் சிவகாமி.

அதற்குப் பிறகு இன்னும் ஒரு முகூர்த்த நேரம் வழி நடந்த பிறகு, மேலேயிருந்து வெளிச்சம் வருவதைக் கண்டார்கள்.

''ஆ! சுரங்க வழி முடிந்துவிட்டது!'' என்றார் ஆயனர்.

இருவரும் படிகள் வழியாக மேலே ஒளி வந்த இடத்தை நோக்கி ஏறிச் சென்றார்கள்.

அவர்கள் ஏறி வந்து நின்ற இடம் ஒரு சின்ன மலைப் பாறையில் குடைந்து அமைக்கப்பட்ட சமணர்களின் குகைக் கோயில். ஜைன தீர்த்தங்கரர்களின் பெரிய பிரதிமைகள் மூன்று அங்கே காணப்பட்டன. ஆனால், என்ன பயங்கரம்! கபாலிகர்கள் அந்தச் சமணக் குகையை ஆக்கிரமித்துவிட்டதாகத்

தோன்றியது. எங்கே பார்த்தாலும் மண்டை ஓடுகள் சிதறிக் கிடந்தன.

போதாததற்கு, மூன்று தீர்த்தங்கரர்களின் சிலைகளுக்கு அப்பால் நாலாவது சிலையாகக் கண்ணை மூடிக் கொண்டு ஒரு காபாலிகன் உட்கார்ந்திருந்தான். உடம்பெல்லாம் சாம்பலைப் பூசிக் கொண்டு மண்டை ஓட்டு மாலை அணிந்திருந்த அவனுடைய தோற்றம் பார்ப்பதற்கு மிகக் கோரமாயிருந்தது.

ஆனால், நல்ல வேளையாக அவன் கண்களை இறுக மூடிக் கொண்டு யோக நிஷ்டையில் உட்கார்ந்திருந்தான்.

ஆயனரும், சிவகாமியும் இரண்டாவது தடவை அவனைப் பார்க்காமல் பாறையின் படிகள் வழியாக இறங்கி விரைந்து சென்றார்கள்.

கொஞ்ச தூரம் சென்ற பிறகு, ''அப்பா. இதென்ன ? சமணர் குகைக் கோயிலில் காபாலிகன் வந்து உட்கார்ந்திருக்கிறானே ?'' என்று சிவகாமி கேட்டாள்.

''அம்மா ! இந்தப் பாறை ஒரு காலத்தில் சமணப் பள்ளியாக இருந்தது. மகேந்திர பல்லவரிடம் கோபித்துக் கொண்டு சமணர்கள் இந்த நாட்டைவிட்டுப் போய்விட்டார்கள் அல்லவா ? கோட்டை முற்றுகைக்கு முன்னால் காஞ்சி நகரில் உள்ள காபாலிகர்களையெல்லாம் வெளியில் துரத்திய போது இந்தக் குகையை அவர்கள் பிடித்துக் கொண்டார்கள் போலிருக்கிறது ! அவர்களுக்கு யுத்தம் என்றால் கொண்டாட்டந்தானே : கபாலங்கள் ஏராளமாய்க் கிடைக்குமல்லவா ?''

இப்படிப் பேசிக்கொண்டு ஆயனரும், சிவகாமியும் காட்டுப் பிரதேசத்தின் வழியே நடந்து போனார்கள். கொஞ்ச தூரம் போவதற்குள்ளே, அவர்களுக்கு எதிர்ப்புறத்திலிருந்து பலர் கும்பலாக வரும் பெருமுழக்கம் கேட்டது. சில நிமிஷங்களுக்கெல்லாம், ஒரு பெருங் கும்பல் அவர்கள் கண் முன்னால் எதிர்ப்பட்டது. அப்படி வந்தவர்கள் வாதாபிப் படையைச் சேர்ந்த வீரர்கள் தாம் ! அவர்களுக்கு மத்தியில் தூக்கிப் பிடிக்கப்பட்டிருந்த வராகக் கொடியிலிருந்து இது தெளிவாகத் தெரிந்தது.

(தொடரும்)

# வட்ட மேஜை

வீரபாண்டிய கட்டபொம்மன், கப்பலோட்டிய தமிழன் போன்ற படங்களின் மூலம் திரையுலக சரித்திரத்தில் அழியா இடம் பெற்றுவிட்ட பி. ஆர். பந்தலு அவர்கள் அமரராகிவிட்ட செய்தி, நம்மைச் சோகத்தில் ஆழ்த்தி விட்டது. அிலவரின் அற்புதமான சரித்திர நாவல் கயல்விழியை 'மதுரையை மீட்ட சுந்தர பாண்டியன்' என்ற பெயரில் வண்ணத்தில் உருவாக்கி வந்தார். பத்மினி பிக்சர்சார் இந்தப் படத்தைத் தொடர்ந்து தயாரித்துத் திரையிட வேண்டும். அதுவே பந்துலு அவர்களுக்கு நாம் செலுத்தும் அஞ்சலியாகவும் விளங்கும்.



தலைஞாயிறு.
10–10–74 எஸ். ராஜகணேஷ்

'மகாத்மாவின் உபவாசங்கள்' என்ற பகுதியில் காந்தியடிகளின் கீழ்க்கண்ட உபவாசங்கள் விட்டுப் போய்விட்டன.

1913 – போனிக்ஸ் ஆசிரமத்தில் இருந்த ஒருவர் ஒழுங்குமுறை தவறி நடந்ததற்காக ஒரு வாரம் உண்ணாவிரதம். பிறகு நாலரை மாதங்கள் ஒரு நாளைக்கு ஒரு வேளைதான் உணவு உட்கொண்டார்.

1914 – இரண்டு வாரங்கள் போனிக்ஸில் அதே மாதிரி காரணங்களுக்காக உண்ணாவிரதம்.

திருப்பாப்புலியூர்
7–10–74 சி. எஸ். சந்தானம்

'வெள்ளிவிழா சாதனைகள்' என்ற தலையங்கம் நன்றாகவே எழுதியிருக்கிறீர்கள். ஆனால் அண்ணாவின் மறைவுக்குப் பிறகு தி.மு.க. தேய்ந்து தேய்ந்து சரிந்ததாக ஒரு தவறான கருத்து எழுதப்பட்டிருக்கிறது.

அண்ணா மறைவுக்குப் பின்னர்தான் 1971 தேர்தல். 134 ஆக இருந்த தி. மு. க. சட்ட மன்ற எண்ணிக்கை 184 ஆயிற்று. இதை மறந்தது ஏனோ ?

சென்னை – 5
10–10–74 கே. குலோத்துங்கன்

'பொன்னியின் புதல்வர்' இரண்டொரு ஆபாசமான தமிழ்க் கதைகளைப் படித்து விட்டே பொருமியதாக சுந்தா எழுதுகிறார். அந்த மேதை இப்போது வரும் கதைகளையெல்லாம் படிக்காமல் இருக்க ரொம்பக் கொடுத்து வைத்திருக்க வேண்டும். இன்றைய நவீன தமிழ்ப் படைப்புக்களை அவர் வாசித்திருந்தால் பொங்கி எழுந்திருந்திருப்பார்.

பம்பாய் – 18
6–10–74 வி. ராமசுப்பிரமணியன்

''என்ன, சந்தேகக் கண்ணோடு பார்க்கறீங்க? ஸி. ஐ. ஏ. விவகாரமா? அது விஷயம் கிஸிங்கருக்குத் தெரியாது. மோய்னிஹனிடம் பேசிக்கிறேன்!''





''நான்ஸி என்னைவிடக் கொஞ்சம் உயரம்தான். அதுனாலே நான் ஒண்ணும் தாழ்ந்து போயிட வேண்டாம்!''

# பயணத்தில் வீரர்; பேச்சிலே சூரர்!

உலக சமாதானத்துக்காக வேறு எந்த ஒரு தனி மனிதரையும் விடக் குறுகிய காலத்தில் ஏராளமாய்ச் சாதித்தவர் என்ற தனிப் பெருமை கிஸ்ஸிஞ்சருக்கு உண்டு. சுற்றுப் பயணம் மேற்கொள்வதில் அவருக்கு நிகர் அவர்தான். விமானத்திலேயே அவர் வாழ்நாளின் பெரும் பகுதி கழிந்துவிடும் என்று நினைக்கத் தக்க அளவுக்குப் பயணப்படுகிறார். உதாரணத்துக்கு 1973ம் ஆண்டை எடுத்துக் கொள்ளுங்கள்: ஜனவரியில் பாரீஸ், ஹனாய்; பிப்ரவரியில் ஹனாய், சைனா, மீண்டும் ஹனாய்; மே மாதத்தில் மாஸ்கோ, பிரிட்டன், பிரான்ஸ்; ஜூன் மாதத்தில் பிரான்ஸ், பீகிங், மீண்டும் பிரான்ஸ்; ஜூலையில் பிரான்ஸ். ஆகஸ்டில் மெக்ஸிகோ; அக்டோபரில் பீகிங், இஸ்ரேல், எகிப்து; நவம்பரில் மொராக்கோ, டுனிஷியா, ஜோர்டன், சவுதி அரேபியா, எகிப்து, சைனா, ஜப்பான், தென் கொரியா. டிசம்பரில் பிரான்ஸ், 13ந் தேதி முதல் 17ந் தேதிக்குள் ஏழு நாடுகள், பிறகு லிஸ்பன், ஜெனிவா.

இத்தனை சுற்றுப் பயணங்களை மேற்கொள்வதே ஒரு சாதனை எனில் கிஸ்ஸிஞ்சரோ அதற்கும் மேலாக உலக சமாதானத்துக்கும் பல்வேறு நாடுகளிடையே நட்புறவுக்கும் அளப்பரிய பணி யாற்றியுள்ளார். இல்லாமலா நோபல் பரிசு தந்தார்கள்?

கிஸ்ஸிஞ்சர் இம்மாதம் 27ந் தேதி பாரதம் வருகிறார். உணவுத் துறையிலும் பொருளாதாரத் துறையிலும் பல கடும் பிரச்னைகள் நம்மை எதிர்நோக்கி யிருக்கும்போது உற்ற நண்பர்கள் நமக்குத் தேவை. கிஸ்ஸிஞ்சரின் விஜயம் பழுதுபட்டுள்ள இந்திய அமெரிக்க நல்லுறவுகள் சீர்ப்பட உதவுவதோடு பாரதத்துக்குப் பயனுள்ளதாகவும் அமையட்டும்.

அவரை வரவேற்கும் முகமாக அவரது வண்ணப் படத்தை இவ்விதழ் மேலட்டையில் வெளியிட்டு மகிழ்கிறோம். எவ்வளவோ கடுமையான வேலைகளுக்கிடையிலும் அதி முக்கியமான பேச்சு வார்த்தைகளுக்கிடையிலும் கிஸ்ஸிஞ்சர் நகைச்சுவையை மறப்பதில்லை. பளிச்சென்று சிரிப்பார், சிரிக்கவும் வைப்பார். அவரது நகைச்சுவைக்கும் சிந்தனை ஆற்றலுக்கும் எடுத்துக்காட்டாகச் சில சம்பாஷணைகளைக் கீழே தருகிறோம்.

—ஆசிரியர்

## மாவோ பேசிய ஆங்கிலம்

மா வோ துங்—கிஸ்ஸிஞ்சர் சந்திப்பு பற்றிச் செய்தியாளர் கூட்டத்தில்:

கேள்வி: மாவோ ஆங்கிலத்தில் பேசினாரா?

கிஸ்ஸிஞ்சர்: சில வரிகள் ஆங்கிலத்தில் பேசினார்.

கேள்வி: அவை என்ன என்று சொல்வீர்களா?

பதில்: ஓ! 'ஸிட் டவுன், ப்ளீஸ்...'

கேள்வி: நீங்கள் சீனத்தில் பேசக்கூடியதை விட இது அதிகம்தான்!

பதில்: நூற்றுக்கு நூறு உண்மை.

## பகிரங்கமும், ரகசியமும்

தூதர்களும் சட்டமன்ற உறுப்பினர்களும் கலந்துகொண்ட ஒரு விருந்தில்:

''இன்றிரவு விருந்துக்குப் பின்பு, 'ராஜதந்திரிகள் பகிரங்கமாகக் குடித்தார்கள்; அந்தரங்கமாகப் பேசினார்கள்' என்று சட்டமன்ற உறுப்பினர்கள் சொல்வார்கள். 'உறுப்பினர்கள் பகிரங்கமாகப் பேசினார்கள்; இரகசியமாகக் குடித்தார்கள்' என்று ராஜதந்திரிகள் தந்தியடிப்பார்கள் என நினைக்கிறேன்.''

## பெண்களும், பேச்சும்

□ ஒரு டெலிவிஷன் பேட்டியில், பார்பரா வால்ட்டர்ஸ் கேட்ட கேள்வி:

அழகிய பெண்களுடன் சுற்றிக் கொண்டும், நடிகைகளுடன் குலவிக் கொண்டும் திரியும் ஓர் ஆசாமி, சூ-யென்-லாய், லீ-டக்-தோ ஆகியோருடனும் பேச்சு நடத்துகிறாரே என்று பொறுப்பான சிலர் கவலைப்படுகிறார்கள். உங்களுடைய இந்த இரு இயல்புகளும் முரணானவை என நீங்கள் நினைப்பதுண்டா?

கிஸ்ஸிஞ்சர்: இல்லை, அம்மணி! உண்மையில் அவை ஒன்றுக்கொன்று பக்கபலமாயிருக்கின்றன!

## 'அழகியரெல்லாம் ஆடலாம்'

□ 1972ல் டெஹ்ரான் நகரில் ஓர் இரவு விருந்திக்கு டாக்டர் கிஸ்ஸிஞ்சர் போயிருந்தார். ஆடல் அழகி ஒருத்தி ஆடிய வண்ணம் வந்து அவரது மடியில் உட்கார்ந்தாள். செய்தியாளர்களிடம் இதுபற்றி அவர் என்ன சொன்னார், தெரியுமா?

''இதுபோல அழகிய பெண்கள் உலகில் ஆபத்தில்லாமல் வாழவே நான் சமாதான முயற்சிகளை மேற்கொண்டு ரஷ்யா போய் வந்தேன்!''

## பதவியில் வந்த பகை

□ ''லைஃப்'' இதழுக்கு அளித்த ஒரு பேட்டியில்: ''இந்த வேலை என் மன மாயைகளைக் குணப்படுத்தி விட்டது. இப்போது, மெய்யாகவே எனக்குப் பகைவர்கள் உள்ளனர்.''

## சொல்லில் சிக்கனமா?

□ செய்தியாளர் கூட்டம் ஒன்றில்:

கேள்வி: வாணிபச் சலுகைகள் ஏதும் இருக்க மாட்டா என்பதுதானே உங்கள் சுருக்கமான பதில்?

பதில்: செய்தியாளரிடம் நான் பேசுகையில் சுருக்கமான பதில் என்பதே கிடையாது.



''ரொம்பப் பிடிவாதமா இருந்தா எப்படி? கொஞ்சம் விட்டுக் கொடுங்க!''

## வலிமைக்கு உரைகல்

□ ''இராணுவ, பொருளாதார, அரசியல் ஆற்றல்கள் ஒன்றோடு ஒன்று நெருக்கமாகப் பிணைந்திருப்பவை. ஒரு நாடு வலிமையுடன் விளங்க வேண்டுமானால் இவை அனைத்திலும் அது பலமுள்ளதாக இருக்க வேண்டும். இன்று பலமென்ற சொல் மிகவும் சிக்கலான ஒன்று. இராணுவ ஆற்றல் இருந்தால் அரசியல் செல்வாக்கு உண்டு என்ற உறுதி கிடையாது. பொருளாதாரப் பேரரசுகள் இராணுவத் துறையில் வலுவற்றவையாக இருக்கக்கூடும். இராணுவ பலம், பொருளாதார பலவீனத்தை மறைக்க முடியாமல் இருக்கலாம். இராணுவ, பொருளாதார பலம் இரண்டுமில்லாமலே நாடுகள் அரசியல் செல்வாக்குள்ளவையாக விளங்க முடியும்.''

மேலட்டை வண்ணப்படம் உதவி:

**அமெரிக்கத் தகவல் நிலையம்.**



''உணவு விஷயம் தானே? கவனிச்சுக்கறேன், கவலையை விடுங்க!''



''என்ன ஸார், மறுதேர்தல் நடந்தும் வசதியான அளவில் பெரும்பான்மை கிடைக்காமல் போயிடுத்தே!''

கவிஞன் அரவிந்தன் அந்த நட்சத்திர ஹோட்டல் அறையின் 'லிட் அவுட்'டில் வந்து அமர்ந்தபோது சரியாக மாலை மணி ஆறு.

அவன் எதிரே நிரப்பி வைத்த மதுக் கோப்பையும் வழங்கத் தயாரான நிலையில் மதுக் குப்பியும்.

தோட்டத்துப் புல்வெளியில் யாரோ இயக்கிய டிரான்ஸிஸ்டரின் எலெக்ட்ரானிக் முனகலில் மிதந்த வர்த்தக ஒலிபரப்பு.

'கவிஞர் அரவிந்தன் இயற்றிய பாடலுக்கு இசையமைப்பு......''

பின்னணிப் பாடகியின் குரலில் தேன் குழைந்தது.

''வானத்து நிலவெடுத்து முகமாக்கி
கார்முகில் கடனாக அளித்த குழலில்
வையத்து மலரெல்லாம் பறித்துச் சூட்டி....''

அரவிந்தன் மனம் துணுக்குற்றது.

''தேனெடுக்க வந்து சுற்றும்
வண்டினத்தைப் பற்றி,
விழியெனவே பதித்து விட்டு
காலைத் துருவனையே நெற்றித் திலகமதாய்
வைத்த இறைவன் ஏா வஞ்சகனோ....''

ரேடியோவை நிறுத்தி விட்டார்கள்... மீதி வரிகளை அவன் வாய் முணுமுணுத்தது.

''இத்தனை அழகினையும் - இங்கே ஒதுக்கி விட்டால்
மற்றவர் என் செய்வர்? ஏனிந்த
மாற்றந்தாய் மனப்பான்மை பிரமனுக்கு?''

கல்லூரி நாட்களில் அவன் இயற்றிய சொல்லோவியம்...அதை இசைத்துப் பாடிப் பரிசு பெற்ற நிர்மலாவின் இனிய நினைவுகள்.

வானொலியில் இப்பாடலைக் கேட்கும் ஒவ்வொரு முறையும் அவன் மனம் சஞ்சலமுற்றுத் தவிக்கிறது.

நிர்மலா... நீ எங்கே?

மனத்தில் சோகம் இரைவிடுகிறது.

''உங்க 'மூடை' நல்லா ஆக்கறதுக்கு ஒரு ஏற்பாடு பண்ணியிருக்கேன்..... இன்னும் ஒரு மணி நேரத்திலே நம்ம டிரைவர் மூலமா அனுப்பறேன்......'' - படாதிபதி.

''ம்ம்.''

'' என்ன அண்ணன் கரத்தாலே பேச மாட்டேங்கிறீங்க?.... போனை வச்சிடவா?''

''வச்சிடுங்க.''

ஏற்பாடு பண்ணியிருக்கிறாராம்! ஜானி வாக்கரா, ஷிவாஸ் ரீகலா?

குடித்துக் குடித்து அவனுக்காகவே அழுது அழுது அவன் கவிதை இயற்ற வேண்டும், அதை அவர்கள் காசாக்க வேண்டும்!....

அவன் செய்வது மட்டும்? அதுவும் பிஸினஸ்தானே?....

இல்லை, இல்லவே இல்லை. மக்களின் ரசனையை வளர்க்க, உயர்த்த.... அவன் பாடு



# உன் தோட்டத்துக் குயில்

## ஏ.கே.பட்டுசாமி

இந்தச் சோகம் ... இந்த மதுப் பழக்கம்... இவை அவனுக்கு இடையிலே வந்துவிட்ட சொந்தங்கள்...

நிர்மலாவின் பிரிவினால் அவனது இதயத்தில் ஏற்பட்டுவிட்ட ஆழமான வடு....அதன் விளைவாக அவனது கவிதைகளில் மயங்கி நின்ற சோகமும் தாபமும்.

'சென்டிமென்ட்ஸ்' ஆக்கிரமித்துக்கொண்டிருந்த திரையுலகில் அவனது சோகச் சித்திரங்களுக்கு நல்ல வரவேற்பு. அவன் விரும்பினாலும் விரும்பாவிட்டாலும் மக்களிடையே இன்று அவன் கவிஞர் திலகம்...

டெலிபோன் மணி அடித்தது.

படுகிறான்.... அதற்கு இவர்கள் செலுத்தும் காணிக்கைதான்..... பணம்.

ஆனால் அந்தப் பணம்...அவனைக் கவிதை எழுத வைக்க முடியாது. கரென்ஸித் தாளின் நீரோட்டத்தைப் போல் அவன் மனத்தளத்தின் அடியில் இழையோடிக் கொண்டிருக்கும் நிர்மலாவின் சோக நினைவோட்டத்துக்குத்தான் அந்தச் சக்தி.

புரொடியூஸரை நினைத்தால் அவனுக்குச் சிரிப்புத்தான் வருகிறது. ஒரு வாரமாக அவனை வண்டாகத் துளைத்துக் கொண்டிருக்கிறார்.





**போட்டிக் கதை-10**

" நீங்க மட்டும் ஒங்க சோகப் பாடல்லே காட்ற ஃபோர்ஸை செக்ஸ் பாடல்களிலே காட்டினீங்கன்னாஎப்படிஅன்னும் தெரியுமா?''

எப்படியாவது கவிஞரைப் பச்சையான ஒரு பாடலை எழுத வைத்துவிட வேண்டும் என்ற துடிப்பு அவருக்கு.

அதற்குத்தான் இந்தக் 'காஸ்ட்லி' ஹோட்டல் 'விக்கர் காபிநெட்' எல்லாம்.

பைத்தியக்காரன், எனது மற்ற நினைவுகளெல்லாம் மங்கி, என் இழப்பே ஒரு பெரும் உணர்வாக என்னை ஆட்கொண்டுவிட்ட நிலையில்.... இந்தச் செயற்கைத் தூண்டுதல்களா என்னை மாற்றப் போகின்றன?.... இரட்டை அர்த்தமுள்ள பால் உணர்வைத் தூண்டுகின்ற சொற்களே என் அகராதியில் கிடையாது.

கவிஞனின் இதழோரம் ஒரு வறண்ட புன்னகை.

அன்று....மனமார அவள் என்னை நேசித்த காலத்தில் நான் பரம ஏழை.... செல்வத்தின் கொடுங் கரங்கள் எங்களைப் பிரித்துவிட்ட பிறகு.... என் காலடியில் பண மழை பொழிகின்ற இன்று.... அவள் இல்லை. யாரோ பெரும் பணக்காரனுக்குச் சொந்தமாக்கப் பட்டு எங்கோ வாழ்கிறாள்.... காலம் ஓடி விட்டது..... ஆனால் நினைவுகள் ?....

பஸ்ஸர் ஒலித்தது. கவிஞர் கதவைத் திறந்தார்.

தயாரிப்பாளரின் டிரைவர்.

''கூட்டிக்கிட்டு வந்திருக்கேன், ஸார் !''

கூட்டி வந்திருக்கிறானா ?... யாரை ?

''அவங்களுக்குப் பக்கத்து அறை 'புக்' பண்ணி இருக்குதுங்க. உங்களுக்குத் தேவைப் பட்டபோது வருவாங்க.''

டிரைவர் நகர்ந்தான்.

பலே ஆள்தான்.... செக்ஸ் பாடலை எழுத 'மூட்' வரவழைக்கவா ?

அவனால் இப்போது சிரிக்க முடியவில்லை; பக்கத்து அறையில் தங்கியிருக்கும் பெண்ணுக்காக இரக்கப்பட்டான். நாட்டில் இப்படி எத்தனை ?

தாய்க் குலம், தாய்க் குலம் என்று வாய் கிழியப் பேசிவிட்டு....

கவிதை எழுதும் மூடே போய்விட்டது. பக்கத்து அறைக்கு ஃபோன் போட்டான்.

''ஹலோ....''

அடுத்த முனையில் மென்மையான குரல் இனிமையாகப் பதில் கொடுத்தது.

''அரவிந்தன் பேசுகிறேன்...நீயோ, இல்லை உன்னைப் போன்ற எவளுமோ என்னை இந்தப் பட முதலாளியின் தேவைக்கேற்ப மாற்ற முடியாது. அதைச் சொல்லத்தான் கூப்பிட்டேன்.''

''அப்போ ?''

''நீ இப்போதே வேண்டுமானாலும் போகலாம், இல்லையென்றால் இரவு நன்றாக ஓய்வெடுத்துக் கொண்டு....''

அடுத்த முனையில் இலேசான நெடுமூச்சு... கண நேர அமைதிக்குப்பின் மீண்டும் அவள்.

''மன்னிக்கணும் ஸார்.... உங்க நிர்மல மான உள்ளத்தை நான் பாழ்படுத்தி யிருந்தா!...''

என்ன சொல்கிறாள் ?....எதற்காக மன் னிப்பு?

''மன்னிப்பு இருக்கட்டும், உன் பெயர் ?''

''பெயரில் என்ன ஸார் இருக்குது ? அருந் ததின்னு அம்மா பேர் வச்சிருந்தா, அதே பேரோடவா இங்கே வந்து தங்க முடியும் ?... ஆனா ஒண்ணு மட்டும் சொல்வேன்.... நான் உங்க ரசிகை.....''

அவன் ஓஹோவென்று சிரித்தான்.

''ஏன் ஸார், என்னைப் போன்றவர்களுக் குக் கலை உணர்ச்சியே இருக்கக் கூடாதா ?''

கவிஞருக்கு ஒரே சுவாரசியம். பேச்சில் இன்டல்.

அவளது நெடுமூச்சு மீண்டும் கேட்கிறது.

''ஸார்.... என் வரலாறு உங்களுக்குத் தெரிந்தால்.....''

''கதை சொல்லப் போகிறாயா ?''

''ஆமாம், கதைதான்..... நான் மணந்தது ஒரு பெரிய பணக்காரரை.....''

''ம்...ம்...!''

''அவர் நொடித்து வீழ்ந்த போது....''

''சொல்லு.''

''அவருக்குப் பற்றுக்கோடாக... சுமை தாங்கியாக வேண்டிய நிலை எனக்கு ஏற் படவும்.''

குரல் சற்று இடறுகிறது.

''அதற்காக ?''

''பட முதலாளி அவருக்குக் கொடுத்திருந்த கடனுக்கு ஈடாக....''

அரவிந்தனின் சிரிப்பு எல்லையை மீறியது.

''சபாஷ் !''

அடுத்த முனையில் அவள் விசும்புகிறாள்.

''அழுகிறாயா ?''

''உங்களுக்குப் பரிகசிக்க 'மூட்' இருக்கிறது. நன்றாகப் பரிகசியுங்கள் ஸார்.... ஆனால்...''

''அதற்கில்லை, தாயே ! கட்டிய கணவன் கல்லுப் போல இருந்து கொண்டு மானம் வெட்கம் இல்லாமல் மனைவியை இப்படிக் கேவலமான தொழிலில் ஈடுபட வைக்கிறான் என்று நினைக்கும்போது...இது பாரத நாடு தானா என்று மனம் பதைக்கிறது! உனக்கும் தான் வெட்கமா இல்லை?''

''.........''

''ஏன் பேசமாட்டேன் என்கிறாய் ? உறுத்து கிறதா ?''

அவளது விம்மல் வெடிக்கிறது... குரல் உடைகிறது.

''அவர்.... அவர் .... அவருக்குப் பக்க வாதம்.''

இப்போது கவிஞன் தெட்டுயிர்க்கிறான். அவனது இளகிய மனத்தில் வேதனை. இரக்கம்...

''என்னை மன்னித்துவிடம்மா. என்றாலும் என்னால் உன் கூற்றைச் சீரணிக்க முடிய வில்லை. புருஷன் நோயாளி என்றால் அதற்காக இப்படித்தான் படி ஏற வேண்டுமா? உழைத் துச் சம்பாதிக்கும் பெண்களை நீ பார்த்த தில்லையா?''

அவள் கதறி விட்டாள்.

''ஐயோ அரவிந்த்! என்னைச் சித்திரவதை செய்யாதீர்கள்.''

அரவிந்த்!...

''யார்... நீ....நீ...''

இரைந்துகொண்டே பேசுகிறான் அவன்..

''ஆமாம் அரவிந்த்! நான்... நான்தான்!''

''நி...ர்...ம...லா...!''

கவிஞன் ஸ்தம்பித்து விட்டான். எத்தனை எத்தனையோ கேள்விக் குவியல்கள் அவனது மூளையில் முட்டி மோதி மின்னிச் சிதறுகின் றன. மனம் குழம்புகிறது.

சிறிது மௌனம். இருவருமே பேசவில்லை. பின்னர் மெல்ல மெல்ல நிறுத்தி நிறுத்தி அவள் ஏதேதோ கூறுகிறாள். அவள் சொன்ன தனைத்தையும் வார்த்தைக்கு வார்த்தை கிர கித்துக் கொள்ளும் நிலையில் இல்லை அவன் மனம். எனினும் ஒட்டுமொத்தமாக ஒரு சரிதைச் சுருக்கம் அவனுக்குப் புரிந்தது.

'பரம்பரையாகச் செல்வத்தில் செழித்த கணவனின் குடும்பம். ஏராளமான நிதிக் குவை. ஆடம்பர வாழ்க்கை, சமூகத்தில் பெருமதிப்பு. கணவனும் அவளிடம் அன் பாக இராமலில்லை. குடி, குதிரை, கிளப், சூதாட்டம் என்று சிறிது சிறிதாகச் செல்வம் கரைகிறது. கடன் ஏறுகிறது. ஆனால் வெளிப் பகட்டை, போலி அந்தஸ்தை விட்டுக் கொடுக்க மாட்டாத 'பிரஸ்டிஜ்' மனப் பான்மை அவனுக்கு.

செல்வம் இழந்த நோயாளியாகிவிட்ட நிலையிலும் மனைவி வேலை தேடிச் சம்பாதித் தால் குடும்ப கௌரவமே போய்விடும் என்ற பைத்தியக்காரத்தனமான பிடிவாதம்.

கடன் கொடுத்த படாதிபதி ஆலோசனை வழங்குகிறார்...இப்படி இரகசியமாக...'நாக ரிகமான' இடங்களில் 'பெரிய' மனிதர்களின் சகவாசத்தில்...

அந்தஸ்துக்குப் பங்கமில்லை, பணத்துக்குப் பணம் என்று.

கவிஞன் கொஞ்சம் கொஞ்சமாகச் சுதா ரித்துக்கொண்ட நிலையில் அவளது கடைசி வார்த்தைகள் இப்படி...

''ஒன்றுமட்டும் சொல்வேன், அரவிந்த். அவரது வாழ்நாட்கள் மாதக் கணக்கில்தான் என்று தெளிவாகிவிட்ட நிலையில் காசு வாழ் வுக்கும் போலி அந்தஸ்துக்கும் என்னையே நம்பியிருக்கிறார். வேறு புகல் இல்லாத அவ ரைக் கைவிடவோ, அவரது கெஞ்சலுக்கு மறுப்புக் கூறவோ எனக்குத் திராணி இல்லை. வாழவும்மாட்டாமல் சாகவும் மாட்டா மல்....''

அரவிந்தன் விக்கித்து நின்றான்.

''என்னை வெறுக்காதீர்கள் அரவிந்த்!''

''.........''

''நான் இப்போது உங்கள் அறைக்கு...''

''வேண்டாம் நிர்மலா!...வராதே...தயவு செய்து வந்துவிடாதே... என் கனவுகளில் உறையும் என் நிர்மலாவின் புனிதமான உரு வம் சிதைய வேண்டாம். உன்னை ஏற்றி வைத்துள்ள உயர்ந்த பீடத்திலிருந்து இறக்கி விட என் இதயம் சம்மதிக்காது.''

''உண்மைதான் அரவிந்த். இன்றைய நிர்மலா இனி பூஜைக்குரிய உங்கள் புது மலராக மாற முடியாது. என்றாலும் ஒரே

இந்த
தீபாவளிக்கு

# குமரன்

புத்தம் புதிய
டிசைன் பட்டுப்
புடவைகள்
வாங்கி
மகிழுங்கள்



- பல வண்ணங்கள்-
பலப்பல டிசைன்கள்
- நவநாகரீக நங்கைகள்
தேர்ந்தெடுப்பது குமரன்
பட்டுப் புடவைகளே!
- உற்பத்தி விலைக்கே வாங்கிட,
இன்றே விஜயம் செய்வீர்!!

## குமரன் சில்க்ஸ்

(பனகல் பார்க் எதிரில்)
தி. நகர், சென்னை-600017
போன்: 443544

தயாரிப்பு நிலையங்கள்:
காஞ்சீபுரம் & ஆரணி

Sarath-KS

விஷமக் கவிதை - 4

அன்றும் இன்றும்

★

சங்க காலம்
அந்நாள் கண்டார்;-பிற
சங்க காலம்
இந்நாள் கண்டார்!

- தமிழழகன்



ஒரு முறை உங்கள் முகத்தைப் பார்க்க வேண்டும்போல்...''

''இப்போது வேண்டாம் நிர்மலா.... நாளைக்கு அல்லது மறுநாள் நானே உனக்கு எழுதுகிறேன். அப்போது கட்டாயம் நீ பார்க்க வரலாம். உன் விலாசத்தை ஹோட்டல் ஆபீஸில் கொடுத்துவிட்டுப் போ... குட் பை!''

போனை வைத்து விட்டாள்.

பக்கத்து அறைக் கதவு பூட்டப்படும் ஓசை. சற்று நேரத்துக்கெல்லாம் கீழே ஒரு கார் புறப்படுகிறது.

* * *

மறுதினம், தனக்கு வந்த அந்தக் கடித உறையைப் பிரிக்கிறாள் நிர்மலா.

பச்சை மையில் மணி மணியாக எழுதப்பட்டிருந்த "அந்தக் கையெழுத்து யாருடையது என்று அவளுக்குத் தெரியும். கடிதத்துடன் இணைந்த ஒரு தடித்த காகிதக் கற்றை.

படிக்கத் தொடங்குகிறாள்.

''நிர்மலா,

இந்தப் பரிதாபத்துக்குரிய கவிஞனை மன்னித்துவிடு.

கவிதைச் சூழலினின்றும் மாறுபட்ட அவனது கடைசி உரைநடை இது.

அவன் கதை முடியப் போகிறது. அவனது சொந்தக் கவிதை முற்றுப்பெறும் நேரம் வந்துவிட்டது.

ஒரு மாபெரும் கவிஞனின் மரணத்துக்காக இந்த உலகமே அழும்போது — அவன் மட்டும் ஆவியாக ஒரு வீட்டைச் சுற்றி வருவான். அவனுக்காக அங்கு ஓர் இதயம் ஏங்குகிறதா என்று தெரிந்துகொள்ள.

வாழ்வின் கடைசி நிமிஷத் துளிகளைக் கணக்கிடும் இந்த நேரத்தில், பழங் கணக்கின் குறிப்பேடு அவன் முன்னே புரள்கிறது.

கல்லூரி நாட்கள்.

அவனது காதுகளில் வந்து படியும் குழற் கற்றையினூடே அவன் கிசுகிசுக்கிறான். நாணத்தோடு அவனைப் பருகிய அவளது விழிகளில் போதை ததும்புகின்றது. அவன் கள்வெறி கொள்கிறான்.

''அதிர்ஷ்டக்காரனடா அரவிந்த்! அவளுக்குத் தன் அழகில் மமதை. உனக்கு உன் கவிதையில் கர்வம்..''

நண்பர்களின் பரிகாச மொழி அவனைப் பரவசப்படுத்துகின்றது.

இவையெல்லாமே ஒரு நாள் கனவாகிப் போகவும் கூடும் என்று அவனுக்குப் புரியாமற் போனதே நிர்மலா, அவன்தான் எத்தனை அப்பாவி!

கற்பனையில் கோட்டை கட்டி, கவிதைகளால் அலங்கரித்துத் தன் நா நயத்தாலேயே நானிலத்தையும் சொந்தமாக்கிக் கொண்டு விடலாம் என்று இறுமாந்த அந்தப் பேராசைக்காரனுக்கு வேண்டும்!

உலக நியதிப்படி அவனது நா நயம், 'நாணயத்'திடம் தோல்வி கண்டது. உன் திருமணம் கவிஞனின் கற்பனைக்கும் எட்டாத பண மலையின் உச்சியில் நிச்சயிக்கப்பட்டபோதுதான்..

ஏமாற்றம்தான் என்றாலும் தன் அன்புக் காதலி எங்காவது நலமாக வாழட்டும் என்ற நல்ல மனம் அவனுக்கு.

கவிஞன் உருவாகிறான், தீவிரமான சோகத்தினிடையே மலர்கிறான், மறக்க 'முடியாத இழப்புக்கு நடுவே மணக்கிறான் என்ற உண்மையை உன் பிரிவு உணர்த்தி விட்டது.

தனது அந்த இழப்பை நினைத்து நினைத்தே தனக்காகக் கழிவிரக்கப்பட்டே, கண்களில் வழியத் துடிக்கும் நீர்த்திரளை அழுத்தி இதயத்தின் வழியாகக் கவிதையாக உருமாற்றி ஓடவிட்ட அந்தக் கவிஞனின் பேனாமுனை....

இன்று எழுத மறுக்கிறது.

ஏன்?

அவனது சோகத்துக்கும் மேலான ஒரு சோகத்தை இன்று அவன் கண்டுவிட்டான். அந்த மாபெரும் சோகம் இவனது இழப்பைச் சிறு துரும்பாக்கி விட்டது.

அவனுக்குப் புரிந்து விட்டது.

சோகம் சுய அனுபவமாக இருக்கும்வரை தான் கற்பனை சிறகடிக்கும். மற்றவர் சோகத்தைத் தன்னுடையதாக எண்ணும்போது அழ மட்டுமே தோன்றும். கவிதை பிறக்காது.

நிர்மலா, அவன் வாழ்ந்தது போதும் நிர்மலா, இனி வாழத் தேவையில்லை. இப்போது அவனுக்கு வேண்டியதெல்லாம் ஒன்றுதான்.

எந்த 'நாணயம்' அவர்களைப் பிரித்ததோ, அந்த 'நாணயத்தை' அவன் அவளுக்கு வழங்க வேண்டும். அது அவளைச் சீரான பாதையில் வாழ வைக்க வேண்டும் என்ற லட்சியத்தோடு....

அவனது கண்மணி, அவனது பொற்கனவு இனி எந்த அறையின் கதவையும் தட்ட மாட்டாள் என்ற திட நம்பிக்கையோடு...

தூக்க மாத்திரைகளின் துணை கொண்டு அவன் மீளா உறக்கத்தில் ஆழ்ந்துவிட விரும்புகிறான்.

மீண்டும் பணத்துக்கு வெற்றி
கவிஞனுக்கு மறுபடியும் தோல்வி.

உன் அரவிந்த்''

நிர்மலாவின் கரங்களிலிருந்து கடிதமும், அவனது சொத்து அனைத்துக்கும் அவளை உரிமையாக்கும் அந்தப் பத்திரக் கற்றையும் நழுவின.

அதே நேரத்தில் கவிஞனின் படமும், வாழ்க்கைக் குறிப்பும், 'ரோட்டரி'யில் ஏறிச் செய்தித் தாள்களில் அச்சாகிக் கொண்டிருந்தன.



# எங்கள் குல தெய்வம்

''பால நாகம்மா'' காலத்திலிருந்து ''வெள்ளிக் கிழமை விரதம்'' வரையில் வந்த நாகத்தைப் பற்றிய படங்களில் இதுவும் ஒன்று. முத்துராமன், கே. ஆர். விஜயா, ஜெயசித்ரா, எஸ். வி. சுப்பையா ஆகியவர்கள் இதில் நடித்திருக்கின்றனர்.

நாகத்துக்குத் தீங்கிழைத்துவிட்ட கணவனின் உயிரைக் காக்க நாகத்துடன் போராடி மீட்ட ஒரு பெண்ணின் கதை. கே. ஆர். விஜயா அந்தப் பாத்திரத்தை ஏற்றுத் தம் நடிப்பினால் அனைவரையும் நெகிழ வைத்து விடுகிறார். பாராட்டுக்குரிய நடிப்பு.

ஜெயசித்ரா பாம்பாட்டியின் மகளாக வந்து நாகத்தின் வஞ்சம் தீர்க்கும் பணியில் தீவிரமாக நிற்கிறார். நல்ல நடிப்பினால் நமக்கு நிறைவையும் அளிக்கிறார். பாம்பாட்டி வேடம் எஸ். வி. சுப்பையாவுக்கு நன்கு பொருந்தியிருக்கிறது. தமது அனுபவம் மிக்க நடிப்பினால் தம் பாத்திரத்துக்குத் தனியொரு மதிப்பை அளித்து விடுகிறார்.

முத்துராமன், கதாநாயகன் - ஆனால் வழக்கமான தவறே செய்யாத கதாநாயகனல்ல. தவறு செய்துவிட்டு அவர் துடிக்கும் துடிப்புத்தான் அவர் நடிப்பில் தனிப் பிடிப்பைத் தந்திருக்கிறது. தன்னை வஞ்சம் தீர்க்கச் சதா சுற்றிவரும் நாகத்தைக் கண்டு அவன் நடுங்குவதன் மூலமே அவனது பாவத்துக்குப் பரிகாரம் செய்யப்பட்டு விடுகிறது. முத்துராமனின் நடிப்பு மிக மிக இயற்கையானது.

ஒளிப்பதிவு டைரக்டர் எம். கிருஷ்ணசாமி பாராட்டுக்குரியவர். காமிரா அதியற்புதமாக இயக்கப்பட்டிருக்கிறது.

திரைக்கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக்களை ஏற்று, பி. ஆர். சோமு தம் பணியைச் சிறப்பாகச் செய்திருக்கிறார். வசனத்துக்கு நம் தனிப் பாராட்டு. படத்தின் முக்கிய அம்சம், நாக தேவதையின் மகிமையாதலால் திரைக் கதையைப் பிடித்து அலசுவதில் பயனில்லை.

இந்தப் படம் எடுத்தவர்களைப் பாராட்டுவதற்கென்று ஒன்றும் இல்லாவிட்டாலும், அவர்களோடு போட்டி போட்டுக் கொண்டு காட்சிக்குக் காட்சி படம் எடுத்து அற்புதமாக நடித்திருக்கும் பாம்பை எத்தனை பாராட்டினாலும் தகும்! ஒரு காட்சிகூட விடாமல் பாம்பு வருகிறது. மாடிப் படியில் நெளிகிறது, படுக்கையறையில் படம் எடுக்கிறது, ரயிலுடன் போட்டி போட்டுக் கொண்டு ஓடுகிறது. இந்த நாகப் பாம்புக்கு ஒரு சபாஷ் போடுவதுடன், அதற்குச் சிரமப்பட்டுப் பயிற்சி அளித்திருக்கும் சையத் அமீருக்கும் ஒரு சபாஷ் போடுகிறேன்!

''எங்கள் குல தெய்வம்'' சனிக்கிழமை யன்று வந்த ''வெள்ளிக்கிழமை விரதம்!''

ஏற்கெனவே நாடக மேடையில் இருந்து நடித்துத் திரை உலகத்துக்கு வந்தவர் மனோரமா. இப்பொழுது மீண்டும் ஒரு நாடகக் குழுவைத் தொடங்கி இச்சுவையான நாடகத்தை ரசிகப் பெருமக்களின் பேராதரவுடன் வெற்றிகரமாக நடத்தி வருகிறார். இந்த நாடகத்தில் இவருக்கு இரட்டை வேடம். 'கமர்கட்டு' காத்தாயியாக வந்து சேரிப்புறங்களில் மிட்டாய் விற்கிறார். பணக்காரரான புண்ணியகோடியின் வீட்டு வேலைக்காரியாகவும் வந்து கடைசியில் அவரையே கையில் போட்டுக்கொண்டு ஆட்டிப் படைக்கிறார். இரண்டு மூன்று வித வேடங்களிலும் மனோரமாவின் நடிப்பு 'ஏ ஒன்!' இவரது சிரிப்பும், நொடிப்பும், வெடிப்புமாகச் சேர்ந்து மேடையையே களை கட்டச் செய்கின்றன.

மனோரமாவின் நகைச்சுவை நடிப்புக்கு ராமாராவின் நடிப்பு பக்கவாத்தியமாக அமைந்து நாடகத்துக்கு மேலும் களை கூட்டியது.

காத்தாயிக்குத் துணை நின்று நாடகத்தை நல்லபடியாக முடித்து வைக்கும் ராமு, நல்ல பாத்திரம். கண்ணன் அந்தப் பாத்திரத்துக்கு உயிர் கொடுத்திருக்கிறார்.

புண்ணியகோடியாக வந்த டி. வி. எஸ். கோபால், ராமுவின் அண்ணன் சோமுவாக நடித்த ராமமூர்த்தி, அவர்களது தந்தை வேலாயுதமாக நடித்த சௌந்தரராஜன், மல்லிகாவாக வந்த ஜெயப்பிரியா ஆகியவர்கள் நாடகத்தைத் தங்கள் நடிப்பினால் உயர்த்தி விட்டனர்.

**காந்தன்**

இந்த நாடகத்தைப் பலமான 'சஸ்பென்ஸ்' வைத்துத் தயாரித்திருக்கிறார்கள். ஏனோ அந்த 'சஸ்பென்ஸ்' பாராட்டும் விதத்தில் உருவாகவில்லை. ஆனாலும் நாடகம் சுவாரஸ்யமாக இருக்கிறது. நாடகத்தின் தலைப்பு? தலைப்பு என்று ஒன்று வேண்டுமே! அதற்காகக் கொடுக்கப்பட்டது அவ்வளவு தான்.

கதை, வசனம், டைரக்ஷன் ஆகிய பொறுப்புக் களை ஏற்றிருப்பவர் எம். எஸ். சோலைமலை. விறுவிறுப்பான நாடகத்துக்கும் வசனத்தின் சிறப்புக்கும் அவரைப் பாராட்டலாம்.

# கோல்டன்ஸிடி



# கள்ளக் கடத்தல் வெள்ளம்!

**ரவீந்திர ஸ்ரீவாஸ்தவ்**



தங்கத்தைப் போலவே, ஸ்விட்சர்லாந்து, ஜப்பான் ஆகிய நாடுகளிலிருந்து, கடிகாரங்கள், அழகு சாதனங்கள், டேப் ரிகார்டர், டிரான்ஸிஸ்டர், காமிரா போன்ற பல வகைப் பொருள்கள் துபாயி, பேருத், குவைத் முதலிய நாடுகளுக்கு அன்றாடம் செல்கின்றன.

துபாயி அல்லது இதுபோன்ற ஃப்ரீபோர்ட் பகுதிகளில் இந்தப் பொருள்கள் சட்டரீதியாகவே வருகின்றன. அங்குள்ள கடைகளில் தங்கக் கட்டிகளோ, பிஸ்கட்டுகளோ வெளிப்படையாகவே விற்கப்படுகின்றன, வெற்றிலை பாக்கு, சிகரெட், பீடி விற்பது போல!

துபாயிலிருந்து இந்தியாவுக்கு இந்தத் தங்கக் கட்டிகள் விநியோகிக்கப்படும் கதை மிகவும் விந்தையானதுதான். அங்குள்ள கடத்தல்காரர்கள் இந்தியக் கடத்தல்காரர்களுடன் சங்கேத மொழியில் தொடர்பு கொள்ளுகிறார்கள். பம்பாயில் ஊர் பெயர் அற்ற தொலைபேசிகள் எத்தனையோ இருக்கின்றன. இப்பொழுது கடத்தல்காரர்களை வேட்டையாடும் மும்முரத்தில் பத்தாயிரம் 'போனமி' தொலைபேசிகள் பம்பாயில் இருப்பதாகக் கூறப்படுகிறது. பொய்ப் பெயரில் அவர்கள் 'டிரங்கால்' செய்வார்கள். கடத்தல்காரர்கள் பிரமுகர்வாழ் பகுதியில் பல தளங்களை வாடகைக்கு எடுத்து வைத்திருக்கிறார்கள். அவைகளில் அவர்களுடைய கையாட்களை வாழ்கிறார்கள்.

பம்பாய்க் கடத்தல்காரர்களிடமிருந்து ஆர்டர் வந்ததும் பொருள் 'தாவு'களில் ஏற்றப்படுகின்றன. 'தாவு' என்பது விசைப் படகு ஆகும். இவை ஐம்பது அறுபது 'நாட்' வேகத்தில் செல்லக்கூடியவை. தாவுகளில் பல இரகசிய அறைகள் உண்டு. இரண்டு இணைப்புக்கள் உள்ள பகுதிகளில், மேலும் மேலேயும் கிடைத்த இடங்களில் எல்லாம் இரகசிய அறைகள் நிர்மாணிக்கப்பட்டிருக்கும். மரமும், இரும்பும் இணைத்து இவற்றுக்குள்ளே தங்கப் பாளங்கள், கட்டிகள், கம்பிகள், பிஸ்கட்டுகள் ஆகியவை, யாரும் இலேசில் கண்டுபிடிக்க முடியாதபடி வைத்து மூடப்படுகின்றன.

எல்லாப் பொருள்களையும் தனித் தனி பாலிதீன் பைகளில் நன்றாக 'பாக்' செய்து, சணல் சாக்கு மூட்டைகளில் வைத்துவிடுகிறார்கள். துணி முதலியவற்றைத் 'தாவு'களில் ஏற்றிக் கொள்ளுகிறார்கள். தாவு இந்தியாவுக்குப் புறப்பட்டதும், தங்கப்பாளங்களைப் பிரித்து, இதற்கென்று பிரத்தியேகமாகத் தைக்கப்பட்ட ஜாக்கெட்டுகளில் வைத்துத் தைத்து விடுகிறார்கள். தங்கப் பிஸ்கட் ஒவ்வொன்றின் நிறையும் பத்துப் பத்துத் தோலா ஆகும். ஸ்விட்சர்லாந்து, லண்டன், பிரான்ஸ் முத்திரைகூட இவற்றின் மீது பதிக்கப்பட்டிருக்கும். ஜாக்கெட்டுகள் பார்ப்பதற்கு நேரு கோட்டுப் போன்றிருக்கும். இவற்றைக் கடத்தல்காரர்கள் வெற்றுடம்பில் அணிந்து கொள்ளுகிறார்கள். அப்புறம் பனியன், சட்டை, கோட்டு ஏதாவது அணிந்து கொள்ளுகிறார்கள். தங்கம் வைத்துத் தைக்க ஜாக்கெட் என்ற எண்ணமோ ஐயமோ யாருக்குமே ஏற்படாது. சமீபத்தில் ஒரு புதிய பட்டை தயாரிக்கப்பட்டிருக்கிறது. இடுப்பில் அணிந்துகொள்வது போல. ஒரு ஜாக்கெட்டுக்குள் நூறு பிஸ்கட்டுகள் வைக்கக்கூடிய அளவுக்கு இடம் உண்டு. பம்பாய் கறுப்பு மார்க்கெட்டிலும், வெளுப்பு மார்க்கெட்டிலும் கூடத்தான் தோலா நானூறு, ஐந்நூறு என்று விலை போகிறது. அதாவது ஒரு ஜாக்கெட்டுக்குள் நான்கைந்து லட்சம் பெறுமானமுள்ள தங்கம் வைத்துத் தைக்கப்படுகிறது. இது போன்ற ஜாக்கெட்டுகள் பல டஜன்கள் ஒரு 'தாவு'வில் வருகின்றன. தங்கப்பாளங்களோ, கட்டிகளோ கம்பிகளோ வருவதென்றால் சாக்குப் பைகளில் அவற்றைப் போட்டுக் கட்டி விடுகிறார்கள். அந்தச் சாக்குப் பைகளுக்குக் காற்று வெளியேறாத படிக்குக் காப்பு அளித்து ஆக்ஸிஜனால் நிரப்பி, தாவுகளில் கட்டித்





முன் பக்கம்: சுங்க அதிகாரிகள் முன்னிலையில் கடத்தல் தங்கம். இந்தப் பக்கம்: கடத்தல் மன்னர்கள்.

1. யூசுப் படேல்.
2. மஸ்தான்.
3. பாகியா.

கீழே: கடத்தல் பொருள்கள்.— தங்கக் கட்டிகள்; தங்க நாணயங்கள்.

தண்ணீரில் இறக்கி விடுகிறார்கள். ஆக்ஸிஜன் நிறைந்திருப்பதினால் சாக்குப் பைகள் தண்ணீருக்குள் மூழ்குவதில்லை. 'தாவு'களுக்கும் சுமையாயிருப்பதில்லை. இதுபோல் லண்டன், பிரான்ஸ், ஸ்விட்சர்லாந்து ஆகிய நாடுகளிலிருந்து வரும் தங்கம்; ஜப்பானிலிருந்து வரும் அழகுசாதனங்கள், டேப்ரிகார்டர், ரேடியோ, துணிமணிகள், சிகரெட், காமிராக்கள்; சீனாவிலிருந்து வரும் சிகரெட் லைட்டர்கள், பேனாக்கள், வாய் ஆர்மோனியம், காமிரா, வாசனைத் திரவியங்கள் ஆகியவை ஒன்று குவைத், துபாயி, மஸ்கர் வழியாகக் குஜராத், பம்பாய், கேரளம் முதலிய இடங்களுக்கு வருகின்றன. அல்லது மகாவோ, ஹாங்காங் வழியாகக் கல்கத்தா, சென்னை, கொச்சின் ஆகிய இடங்களுக்கு வருகின்றன. அதிர்ஷ்டவசமாகப் பிடிபடவில்லை என்றால் வெகு எளிதில் நாட்டின் கடைத்தெருக்களில் எல்லாம் இவை வியாபாரத்துக்கு வந்து விடுகின்றன. இது கடல் மார்க்கம். தரை மார்க்கம்கூட உண்டு. கடத்தல் சாமான்களில் பல, பாகிஸ்தான் வழியாக மேற்கு எல்லையில் தரை மார்க்கமாக வந்து சேரவும் செய்கின்றன. வரும் வழிகள் ஆவன: படான்கோட், அமிருதசர், கேமகரண், ஹுஸைனிவாலா, வாகா, ஜைஸல்மேர், பாட்மேர், கச் பகுதி ஆகியவை. மேற்குப் பகுதியிலிருந்து ஆப்பிள் திராட்சை போன்ற பழங்கள் ஏராளமாக வெளி மாநிலங்களுக்கு அனுப்பப்படுகின்றன. கடத்தல்காரர்கள் இந்தப் பழக் கூடைகளிலும் பெட்டிகளிலும் தங்கத்தை வைத்து அனுப்புகிறார்கள். இன்னொரு தரை மார்க்கம் கிழ் எல்லைப் பகுதி ஆகும். இப்பகுதி வழியாக அதிகம் வருபவை சீன — ஜப்பானியப் பொருள்கள் — தங்கமும் உண்டு. நேப்பாளத்திலிருந்து கௌநாடி, திரிபுரா, கல்கத்தா, ஸில்சார், சிக்கிம், டார்ஜிலிங், ஹிமாசலப் பிரதேசம், காங்கடா, நேப்பால் கஞ்ஜ், கோரக்பூர், பஸ்தி, பட்னா ஆகியவற்றுக்கு வருகின்றன. இப்படியாக இந்தியாவின் தெற்கு, மேற்கு, கிழக்கு ஆகிய மூன்று எல்லைகளும் கடத்தல்காரர்கள் சுலபமாக வரக்கூடிய பகுதிகளாக விளங்குகின்றன. ஆனால் கடல் மார்க்கம்தான் அதிகச் சௌகரியம் உள்ளதாகத் தெரிகிறது. எவ்வளவு முடியுமோ, அவ்வளவு அதிகம் கொண்டு வர உதவுகிறது.

கடத்தல் பொருள்கள் ஏற்றி வரும் தாவுக்களோ, கப்பல்களோ, பம்பாய், குஜராத், மதராஸ், கேரளக் கடற்கரைகளுக்கு வந்தாலும் கரைக்கு அருகில் வருவதில்லை. அனைத்துலக நீர் எல்லைக்குள்ளேயே நின்று விடுகின்றன. ஏனென்றால், பதினான்கு பதினைந்து மைல்களுக்கு அப்பால் இருக்கும் அனைத்துலக நீர் எல்லைக்குள் நுழைந்து இந்தியச் சுங்க அதிகாரிகள் அவர்களைச் சிறைப் பிடிக்க முடியாது என்பது அவர்களுக்குத் தெரிந்த விஷயம். எனவே, இந்தியக் கடத்தல்காரர்கள் தான் அங்கு சென்று பொருள்களை எடுத்து வருகிறார்கள்.

இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால், துபாயிலிருந்து புறப்படுவதற்கு முன்னால் எல்லா 'தாவு'களும் இன்ஷ்யூர் செய்யப்படுகின்றன. கடத்தல்காரர்களுக்கென்று ஒரு சிண்டிகேட் இருக்கிறது. இந்தியாவில் இந்தக் கடத்தல் பொருள்கள் அரசால் பறிமுதல் செய்யப்படுமானால், இந்த சிண்டிகேட் நஷ்டஈடு தருகிறது. அதனால் கடத்தல்காரர்களுக்குச் சாமான்கள் பிடிபட்டுவிட்டால் என்ன செய்வது என்ற கவலை இல்லை. அவர்களுடைய ஆட்கள் சிக்கிச் சிறைப்படக் கூடாது என்னும் விஷயத்தில் மட்டும் கருத்தாக இருக்கிறார்கள். அதோடு ஒரு 'தாவு'வில் பல கடத்தல்காரர்களின் பொருள் ஏற்றப்பட்டிருக்கும். பம்பாய் போன்ற நகரங்களுக்குக் கடத்தல்காரர்கள் தங்கள் ஆர்டருக்கேற்பப் பொருள்கள் வந்துவிட்டால், சங்கேத எழுத்துக்களில் செய்தி அனுப்பி விடுகிறார்கள். பொருள்கள் பிடிபட்டுவிட்டன என்றால் செய்தித் தாள்களில் வரும் செய்தியைக் கொண்டு தெரிந்து கொள்கிறார்கள். பிறகு பம்பாய் கடத்தல்காரர்கள் அதை ஊர்ஜிதப்படுத்திக் கொள்கிறார்கள்.

அடுத்துச் சுங்க இலாக்கா, சென்ட்ரல் எக்ஸைஸ், சிற்சில ராஜ்யங்களில் நிறுவப்பட்டுள்ள ஆன்டி கரப்ஷன், ஆன்டி ஸ்மக்ளிங் ப்யூரோ ஆகியவை எப்படி இயங்குகின்றன என்பதைக் கவனிப்போம்.

அன்றாடம் கடல் மார்க்கமாகவும் தரை மார்க்கமாகவும் வரும் கடத்தல் பொருள்கள் ஒன்றரை அல்லது இரண்டு கோடிக்கு இருக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது.



இரண்டு மூன்று ஆண்டுகளுக்கு முந்தியக் கணக்கு இது. இப்பொழுது இன்னும் பெருகி யிருக்கிறது. ஆனால் பிடிபடும் பொருள்கள் பத்து சதவிகிதம்கூட இராது.

உண்மையில் சுங்க இலாக்காவோ, சென்டிரல் எக்ஸைஸ் துறையோ கடத்தலைத் தடுக்கும் விஷயத்தில் ஒருநாளும் கவனம் செலுத்தியதில்லை, ஏதோ 'எங்கள் வீட்டுக்காரரும் கச்சேரிக்குப் போய் வந்தார்' என்று பெயர் பண்ணியதைத் தவிர. தெளிவாகச் சொல்லப் போனால் சென்ற பத்து ஆண்டுகளில் கடத்தல் வியாபாரம் வெகுவாகப் பெருகியிருப்பதற்கு முக்கிய காரணம் ஆட்சி பீடத்தில் அமர்ந்திருக்கும் நமது தலைவர்கள், ஆட்சி புரியும் கட்சி, சுங்கத் துறையினர், சென்டிரல் எக்ஸைஸ் அதிகாரிகள் — ஆகியவர்களைத் தான் கூற வேண்டும். இவர்கள் வாயை மூடக் கடத்தல்காரர்கள் வாரமும் வாய்க்கரிசியும் போட்டிருக்கிறார்கள். இல்லாவிட்டால், சாதாரண அன்றாடங்காய்ச்சிகளும், வயிற்றைக் கழுவ வழி தெரியாதவர்களும் கடத்தல் மூலம் பத்தாண்டுகளுக்குள் நாட்டின் பெருந் தனவந்தர்களில் ஒருவராகப் பவனி வர முடியுமா? இந்திய நாணயங்களின் மதிப்புக் குறைந்து, பண வீக்கம் பெருத்து ஓர் இக்கட்டான நிலையை ஏற்படுத்தவில்லை என்றால் மத்திய அரசு எந்த நிபந்தனையின் பேரிலும் கள்ளக் கடத்தல்காரர்களைச் சிறை செய்யத் துணிந்திராது.

சுங்க இலாகா எப்படி இயங்குகிறது? கடத்தல்காரர்களுக்கு வரும் தகவல்களை அறிவதில் ஆர்வம் உள்ளவர்கள் சிலர் இருக்கிறார்கள். இவர்கள் சுங்க இலாக்காவுக்குத் தகவல் தருகின்றனர். இவர்களை 'இன்ஃபார்மர்' என்கிறார்கள். இவர்கள் அறிவிப்பின் மூலம் பிடிக்கப்படும் பொருள்களில் பத்து சதவீதம் இவர்களுக்குத் தரப்படுகிறது. இந்த அறிவிப்பாளர்கள் பெரும்பாலும் பழைய கடத்தல்காரர்களாகவேதான் இருப்பார்கள். தங்கள் கோஷ்டியினிடம் ஏற்படும் அதிருப்தியினால் இவர்கள் மாறியவர்களாக இருப்பார்கள். இவர்களுக்குச் சங்கேத மொழி தெரிந்திருக்கும்; செயல் முறையும் அத்துபடி ஆகியிருக்கும்.

அறிவிப்பவர்களிடமிருந்து தகவல் கிடைத்ததும், சுங்கத் துறையினர் கூடி ஆலோசித்துப் பிடிக்கத் திட்டம் தீட்டுவார்கள். 'எந்தப் பகுதியில் 'தாவு'விலிருந்து பொருள்கள் இறங்கும்?' என்பதை அறிந்து அந்தப் பகுதியை முற்றுகையிட வரைபடம் வரைந்து கொள்வார்கள். 'இதுவரை காரில் போவோம், இங்கிருந்து கால்நடையாகப் போவோம், இன்ன இன்ன வழியே ஒளிந்து மறைந்து கடற்கரைக்குச் செல்வோம்' என்றெல்லாம் முடிவு எடுப்பார்கள். இருட்டில் கடத்தல்காரர்களுக்குத் தெரியக் கூடாது என்பதற்காக மண் நிற ஆடை அணிவார்கள். நாய்கள்கூடப் புரிந்துகொள்ள முடியாத அளவுக்குக் காலோசை இன்றியே நடந்து செல்வார்கள். படகுகள் கடத்தல் பொருள்களுடன் கடற்கரைக்கு வருவதை எதிர்பார்த்துக் காத்திருப்பார்கள். கரையில் உள்ள ஆட்கள் கடத்தல் பொருள்களை இறக்க ஆரம்பித்ததும் அவர்கள் மீது ஒளிவெள்ளத்

தைப் பாய்ச்சுவார்கள். கண் கூசும் அந்த ஒளியில் அவர்களால் பொருள்களை எடுத்துக் கொண்டு ஓட முடியாது. நாற்புறமும் சூழ்ந்து படகைப் பிடித்துக் கொண்டுவிடுவார்கள்.

சுங்க அதிகாரிகள் கடத்தல் பொருள்களைப் பறிமுதல் செய்வதில்தான் அதிகக் கவனம் செலுத்துவார்கள்; கடத்தல்காரர்களைப் பிடிப்பதில் அவ்வளவாகக் கவனம் செலுத்த மாட்டார்கள். தங்கள் கட்சிக்கு வலு சேர்த்துக் கொள்ள அவர்கள் என்னதான் தர்க்கவாதங்கள் கூறினாலும், கடத்தல்காரர்களைப் பிடித்தால் கடத்தல் பொருளைத் தடுக்கும் பாதிக் காரியம் முடிந்தாற்போல் இருக்கும். எங்களிடம் வாரம் வாரம் 'வாரம்' வாங்குகிறீர்களே, எப்படி எங்களைக் கைது செய்வார்கள் என்று கேட்கிறார்கள் கடத்தல்காரர்கள். தங்கள் வருஷாந்தர கோட்டாவைக் காட்டுவதற்காகத்தான் அவர்கள் பறிமுதல் செய்கிறார்களே ஒழிய நியாயமாகக் கடத்தலைத் தடுப்பதற்காக அல்ல.

சிற்சில சமயம் சுங்க இலாக்கா அதிகாரிகள் உயிரைப் பணயம் வைத்துச் செயல்பட வேண்டியிருக்கிறது. அவர்களிடம் துப்பாக்கி இருக்கிறது என்னவோ உண்மைதான்; ஆனால் அது தற்காப்புக்குத்தான். கடத்தல்காரர்களிடமோ மிக மிக நவீன ஆயுதங்கள் இருக்கின்றன. அவசியம் ஏற்பட்டால், உயிரைக் காப்பாற்றிக் கொள்ளவும் சிறைப்படுவதிலிருந்து தப்பவும் அவர்கள் அதிகாரிகளின் உயிரை வாங்கக்கூடத் தயங்குவதில்லை. அது மட்டுமா? சுங்க இலாக்காவினரிடம் சரியான சாதனங்களே இல்லை. வேகமாகச் செல்லும் விசைப் படகுகள் கிடையா. ஜீப்கள் கிடையா. வயர்லெஸ் செட், ஹோவர் கிராப்ட், வான வீதியிலிருந்தே கடலைச் சுற்றி வரும் ஹெலிகாப்டர், தங்கம் போன்ற பொருள்களைக் கண்டுபிடிக்கும் 'மெடல் டிடெக்டர்' — எதுவுமே கிடையாது. பம்பாய்த் துறைமுகத்தில் வைத்திருக்கும் 'மெடல் டிடெக்டர்' 1947ம் ஆண்டுக்கு முந்தியவை. மற்ற நாடுகளிலோ மிக மிகப் புதுமையான 'மெடல் டிடெக்டர்கள்' வந்துவிட்டன.

கடத்தல் பொருள்களைத் தருவிப்பவர்கள் அதற்கான கிரயத்தைத் தர வேண்டும்! வெளிநாட்டுக் கடத்தல்காரர்கள் இந்திய நாணயத்தைப் பெறுவதில்லை. அவர்கள் பொருளுக்குப் பொருளே கேட்கிறார்கள். கடத்தல் தங்கத்துக்கும் மற்றப் பொருள்களுக்கும் பதிலாக இந்தியக் கடத்தல்காரர்கள் அந்த நாடுகளுக்குத் தேவையான பொருள்களைக் கடத்தி ஏற்றுமதி செய்கிறார்கள். இப்படியாக இந்தியப் பொருள்களும் கடத்தல் பொருள்கள் ஆகின்றன. வெளிநாட்டிலிருந்து வரும் தங்கத்துக்கும் வேறு பொருள்களுக்கும் பதிலாக வெள்ளி, பண்டைய இந்தியக் கலைச் செல்வங்கள், கஞ்சா, அபின், கிராம்பு, ஏலக்காய் போன்ற பொருள்களும் உணவுப் பொருள்கள், வனஸ்பதி, சர்க்கரை, எண்ணெய் போன்ற தேவைப் பொருள்களும் கடத்திச் செல்லப்படுகின்றன.

வெளிநாடுகளில் அதிகக் கிராக்கியான பொருள் வெள்ளி. நாணயச் செலாவணிக்கு அது வெகுவாகப் பயன்படுத்தப்படுகிறது. சமீப காலமாக யுரேனியம்கூடக் கடத்தப்படுகிறது. அமெரிக்கா, பிரான்ஸ், லண்டன் போன்ற இடங்களில் இந்தியக் கலைச் செல்வங்களுக்கு மவுசு அதிகம். அயல்நாட்டுக் குபேரர்கள் தங்கள் வீடுகளை அலங்கரிக்க இந்தியாவின் பண்டைய கலைச் செல்வங்களையும், ஐரோப்பிய ஓவியங்களையும் திருட்டுத்தனமாக வரவழைக்கலாயினர். இங்கு இரண்டாயிரம் ரூபாய் பெறுமானமுள்ள பண்டைய விக்கிரகங்கள் அங்கு பத்து லட்சம் வரைக்கும் விலை போகின்றன. அதே போல் ஐரோப்பாவில் போதைப் பழக்கம் வளர்ந்துவிட்டதனால் கடத்தல்காரர்கள் கஞ்சா, அபினி போன்ற பொருள்களைக் கடத்தத்தொடங்கிவிட்டனர்.

இந்திய ஆலைகளில் தயாரிக்கப்படும் துணிகளைக் காட்டிலும் கடத்தல் துணிகள் நல்லவையாகவும், நயமாகவும் கிடைக்கத் தொடங்கவே, சாதாரண மக்களின் கவனமும் அதில் சென்றது. ஒவ்வொருவனும் ஸ்ட்ரெச்லான் பாண்டும், வெளிநாட்டுத் துணிகளும் ஒவ்வொரு பெண்ணும் ஜப்பானியப் புடவைகளும் உடுத்துபவர்களாகக் காட்சி தரும் நிலைக்கு அவர்கள் ஆர்வம் வளர்ந்துவிட்டது. பலன், இந்திய ஆலைத் தொழில் பலத்த அடி வாங்கியது.

மறுபுறம் வாழ்க்கைக்கு அத்தியாவசியமான பொருள்கள் கடத்தப்படவே, அவற்றின் விலை ஏறிவிட்டது. அதோடு கடைவீதிகளிலிருந்து அவை மாயமாக மறைந்தும் போயின. தற்கால விலையேற்றத்துக்கு இதுவும் பெரும் காரணம். இந்த நிலையில், கடத்தலைத் தடுத்துக் கறுப்புப் பணத்தை வெளிக் கொண்டு வந்தால்தான் விமோசனம் என்ற அளவுக்கு நிலை சீர்குலைந்துவிட்டது. அதனால்தான் கள்ளக் கடத்தல்காரர்கள் படபடவென்று சிறை செய்யப்படுகின்றனர்.

ஆனால் இதனால் எல்லாம் கடத்தல் ஒரு நாளும் நிற்காது. துணிமணிகளிலிருந்து அத்தியாவசியத் தேவைப் பொருள்கள் வரை, கடத்தல் பொருள்களாக இந்தியாவில் விற்பனை ஆகின்றனவே, அவை மலிவாகச் சட்டபூர்வமாகவே கடைகளில் கிடைக்காத வரையில் கடத்தலைத் தடுக்க முடியாது. அல்லது இந்தியாவில் தயாராகும் அதே பொருள்களின் தரம் உயர வேண்டும். கடத்தல்காரர்களைச் சிறைப் பிடித்து மட்டும் பயன் இல்லை. பொதுமக்கள் நல்ல பொருளை நாடித்தான் செல்வார்கள். இந்தியாவில் தயாரான பொருளா, கடத்தலில் வந்த பொருளா என்று எண்ணிச் சீர்தூக்கி அக்கறை காட்டமாட்டார்கள். மக்களின் இயற்கையான மன இயல்புகளைப் புரிந்து கொண்டு அரசாங்கம் சட்டங்களை இயற்ற வேண்டும். அளவுக்கு அதிகமான கட்டுப்பாடுகள் கள்ளக் கடத்தலை ஊக்குவிக்கவே செய்யும்.

**தமிழாக்கம் : அக்ஷயம்**

---

ஒரு பேச்சாளர் ரொம்ப நேரம் பேசித் தள்ளிக் கொண்டிருந்தார்: "நான் அடுத்த தலைமுறைக்காக வாதாடிக் கொண்டிருக்கிறேன்!"

"உங்கள் பேச்சு இன்னும் நீண்டால் அதற்கு அடுத்த தலைமுறைக்கும் வாதாடலாம்!"



# தீபாவளித் திருநாளில்
# ஒளிதரும் வண்ணத்துப் பூச்சி!

வண்ணத்துப் பூச்சி என்றென்றும் உங்கள் துணைவருகும். சீரான விலை-நேரத்தை மிச்சப் படுத்தல்-விலையுயர்வை கட்டுப்படுத்தல்-10% விழாக்கால சிறப்பு தள்ளுபடி!

பண்டிகை காலங்களுக்கு ஏற்ற நாகரீக புத்தாடைகளுக்கு வண்ணத்துப் பூச்சியின் தனிப்படைப்புகளைத் தேர்ந்தெடுங்கள்!

புகழ் பெற்ற காஞ்சிபுரம், ஆரணி மற்றும் கும்பகோணம் பட்டுப் புடவைகள், பண்டைய கலையழகு மிக்க கரைகள், புதுமையான மாதிரிகள் கொண்ட புடவைகள், பருத்தி பிரிண்டெட், கரைகள் மற்றும் சாதாரண புடவைகள், கைத்தறி ஆடைகளுக்கு புகழ் பெற்ற தலைசிறந்த தமிழக நகரங்களிலிருந்து தருவிக்கப்பட்டவைகள், வேட்டிகள் லுங்கிகள், கைக்குட்டைகள், துண்டுகள், நாகரீக வீட்டு அலங்காரத் துணி வகைகள், மற்றும் படுக்கை விரிப்புகள்.

வண்ணத்துப் பூச்சி வழங்கும் பண்டிகை கால விசேட தள்ளுபடி 10% (ரொக்க விற்பனை மற்றும் கடன் வசதி திட்டத் திற்கு) அக்டோபர் 10-ந் தேதி முதல் நவம்பர் 14-ந் தேதி '74 வரையில் அளிக்கப்படும்.



கைத்தறி ஆடைகளின் கவர்ச்சி தேவதை-வண்ணத்துப் பூச்சி!







பெரிய மனிதர் வீட்டுக் கொலுப் படிகளில் எத்தனை எத்தனை பொம்மைகள் இருக்குமோ அத்தனை மேனாட்டுப் பொருள்கள் ஒருவர் வீட்டில் உண்டு. ஆனால் எதையும் அவர் எந்தக் கடத்தல் மன்னனிடமிருந்தும் ரகசியமாக வாங்கவில்லை. முறையாக வெளிநாடுகளில் வாங்கி நியாயமாக வரிப் பணம் செலுத்திக் கொண்டு வந்தவை. முப்பது வருடங்களுக்கு மேலாகவே அவர் மேல் நாட்டுப் பொருள்களை வாங்கி வீட்டில் கொலு வைத்து அழகு பார்ப்பதில் ஆசை கொண்டிருக்கிறார்.

ஏதோ சில உபயோகமுள்ள சாமான்களை வாங்குவதில் ஆட்சேபனை இல்லை. தரமான நம் நாட்டுப் பொருள்கள் இருக்கும்போது மேல்நாட்டுச் சாமான்கள் எதற்கு? தெரியாத்தனமாக இந்தக் கேள்வியைக் கேட்டுவிட்டேன். அவ்வளவுதான்; மனிதருக்கு ஆவேசம் வந்துவிட்டது.

"உங்க கண்ட்ரியிலேயே (அவரும் பாரத தேசம் பெற்றெடுத்த ஒரு மனிதான்!) எவன் ஸார் ஜெர்மன் டேப் ரிகார்டர் மாதிரிச் செய்யறான்?... இந்த ரிஸ்ட் வாட்சைப் பாருங்கள். வருஷம், தேதி, நாள், டயம் எல்லாம் காட்டறது. உங்க ஊரிலே பஞ்சாங்கத்தையும் காலண்டரையும் பார்க்கணும்... போகட்டும். தாழம்பூ, மல்லிப்பூ, ரோஜாப்பூன்னு பீத்திக்கிறீங்களே, எவன் பாரிஸிலே தயார் பண்ணற மாதிரி ஸெண்ட் தயார் பண்ணறான்? போன மாசம் என் மச்சினன் பாம்பேயிலிருந்து ஒரு பாட்டில் லாவண்டர் வாங்கிண்டு வந்தான். பழகின தேங்கா யெண்ணெய் மாதிரி மூக்கைத் துளைக்குது."

எனக்கு அவருடைய பேச்சைக் கேட்டுக் கோபமோ ஆத்திரமோ வரவில்லை. சிரிப்புத்தான் வந்தது.

டேப் ரிகார்டரிலும் ஸெண்டிலும் கைக் கடிகாரத்திலும்தான் நம்முடைய நாட்டு நாகரிகமே அடங்கியிருக்கிறதா?

மேற்சொன்ன நண்பர் ஓர் உதாரணம்தான். கடந்த பல ஆண்டுகளாகவே நம்மிடையே பலருக்கு வெளிநாட்டுச் சாமான்கள் மீது அபாரப் பற்று தோன்றியிருக்கிறது. ஸிங்கப்பூர் குடை, ஜப்பான் காமரா, பிரெஞ்சு வாசனைத் திரவியங்கள், ஜெர்மன் டெரிலின் என்று அலைகிறார்கள். நாகப்பட்டினம், காரைக்கால் போன்ற ஊர்களுக்குச் சென்றால் கேட்கிற முதல் கேள்வியே, 'ஃபாரின் சாமான்கள் என்ன ஸார் கிடைக்கிறது?' என்பதுதான். நாகப்பட்டினத்துக்கு ஒரு கப்பல் வந்தால் போதும். கடை வீதி தேர்த் திருவிழா மாதிரி காட்சி அளிக்கும்.

அணு ஆராய்ச்சியே நடத்தி வெற்றி பெற்ற நம் நாட்டில் எதை வேண்டுமானாலும் நம்மால் தயாரிக்க முடியும். ஆனால் மனிதனுக்கு அத்தியாவசியமான பொருள்களைத் தயார் செய்வதில்தான் நாடு ஈடுபட்டிருக்கிறதுஎன்று பலர் நினைக்க மறுக்கிறார்கள். விமானத்தையும் மோட்டார் காரையும் அப்பளம் தயாரிப்பது போல் தயாரிக்கும் நாட்டில் மேல்நாடுகளுக்கு ஈடாக எதைத்தான் தயார் செய்ய முடியாது?

இன்னொரு நாள் இதே நண்பரிடம் கேட்டேன்:

"ஏன் ஸார், உங்க அமெரிக்காவிலே ஒரு பத்தமடைப் பாயோ, ஒரு மதுரைச் சுங்குடியோ செய்ய முடியுமா? இத்தனை இத்தனை விக்கிரகங்களைத் திருடித் திருடி அனுப்புகிறார்களே, ஒரு விக்கிரகத்தை உங்க ஜெர்மன்காரன் தன் கையால் செய்ய முடியுமா? நம்ம நாட்டிலே பண்ணின டெரிலின் துணி ஹாங்காங்குக்குப் போய்ச் சிங்கப்பூர் வழியாகத் திரும்பி வருகிறது. அதில் ஹாங்காங் கம்பெனியின் பெயர் பளிச்சென்று இருக்கு. உடனே ஒரு தாவு தாவி வாங்கி உள்ளே பூட்டி வைக்கிறீர்கள்!"

"நன்னாச் சொல்லுங்க!" என்றாள் அங்கே வந்த அவருடைய மனைவி. "இவரைப் போலத்தான் இருப்பான் இவர் பிள்ளையும்னு நினைச்சேன். ஒரு படி மேலே மிஞ்சிப் போயிட்டான்!" என்றாள் அவள்.

"ஏன் என்ன ஆச்சு?"

நண்பர் முகத்தை வேறு பக்கமாகத் திருப்பிக்கொண்டார்.

"சொல்லுங்களேன். ஒரு நாள் இல்லாட்டா ஒருநாள் தெரிஞ்சுதானே ஆகணும்? எங்க பிள்ளை அமெரிக்காவுக்குப் போயிருக்கானே இல்லியோ, மேற்படிப்புக்கா? அத்தோடே நிக்கலை. இவருக்கு மேனாட்டிலேருந்து எது வந்தாலும் பிடிக்குமேன்னு ஒரு மருமகளையும் கொண்டு வரப்போறேன்னு எழுதியிருக்கான்! தலை எழுத்து."

"என்னைக் கேட்டால் அவன் செய்யறதில் ஒரு தப்பும் இல்லை என்பேன். அந்த அமெரிக்கப் பெண் இந்தியாவுக்கு வந்தால் நமக்குத்தான் நல்லது. இந்தியப் பண்பு அவளுக்கு வரும். மனித தர்மத்தின் அடிப்படையில் உங்க பிள்ளை அவளைக் கல்யாணம் செய்து கொள்ளுவதில் தப்பு இல்லை" என்றேன்.

நண்பரின் மனைவி சமாதானம் அடையவில்லை.

"என்ன இருந்தாலும் இம்போர்ட்டட் டாட்டர்–இன்–லா!" என்றாள்.



# குவாலியர் ரேயானின் மகத்தான 26 ஆண்டு காலப் பணி





## தன்வலிமை பெறும் கனவை நனவாக்கி வரும் பணி.

ரேயான் துணிகள், ஸ்டேபிள் இழை, ரேயான்-கிரேடு பல்ப் (கூழ்), ரேயான் ஸ்டேபிள் நூலிழைத் தொழிற்சாலைகளுக்-கான எந்திர சாதனங்கள் ஆகிய எல்லா-வற்றையும் நம் நாட்டிலேயே உற்பத்தி செய்து கொள்வதற்கென குவாலியர் ரேயான் செய்துவரும் முயற்சிகள், நாடு சுதந்திரம் எய்திய நாளிலேயே தொடங்கிவிட்டன.

மூங்கில் மற்றும் இதர கெட்டி மரங்களி லிருந்து உயர் திறனுள்ள ரேயான்-ரகக் கூழ் தயாரிப்பு, மற்றும் ரேயான், பல்ப், இவை சார்ந்த தொழிற்சாலைகள் ஆகிய வற்றுக்கான நுட்பமினமான எந்திர சாதனங்களின் உற்பத்தி முதலியவற்றிலே குவாலியர் ரேயான்முன்னோடியாக விளங்குவதனால், ரேயான் தொழிலிலே நம் நாடு தன்வலிமை பெற வழியமைந்துள்ளது.

இன்று, குவாலியர் ரேயானின் ஸ்டேபிள் நூலிழை உற்பத்தியளவு, 520 லட்சம் பேருக்கு ஆடை வழங்கப் போதுமானதாக உள்ளது. மரக் கூழ் உற்பத்தியோ, ஆண்டு தோறும் ஒரு லட்சம் டன்களுக்கு மேல்; இது செல்லுலோஸ் இழையளவிலே கணக்கிட்டால், 5.2 லட்சம் பருத்தி பேல்களுக்கு ஈடாகும்.

கடந்த பத்தாண்டுகளில், குவாலியர் ரேயான் நம் நாட்டின் பொக்கிஷத்திற்கு, வரிகளும் தீர்வைகளுமாக ரூ. 90 கோடி செலுத்தியுள்ள-தோடு, அதே காலத்தில் ரூ. 360 கோடி அந்நியச் செலாவணியை மிச்சப்படுத்தியுள்ளது. இதை நோக்கும்போது, தன்வலிமை வாய்ந்த பொருளாதார அமைப்புக்கு குவாலியர் ரேயான் செலுத்திவரும் மகத்தான பணியின் பெருமை தெளிவாக விளங்கும்.

**குவாலியர் ரேயான்—**
**தேச முன்னேற்றமே முதன்மை எனக் கருதுவோர்.**

தி குவாலியர் ரேயான் ஸில்க் மானுபாக் (வீவிங்.) கோ. லிட்., பிர்லாகிராம், நாக்தா (ம.பி.)

## 13. அண்ணலின் ஆணை

வீர சுதந்திரம் வேண்டி நின்றார் - பின்னர்
வேறொன்று கொள்வாரோ? — பாரதியார்

“அந்த நாட்களில் வாழ்ந்திருப்பதற்கே பாக்கியம் செய்திருக்க வேண்டும்!” என்று சொல்லும்படியாக ஒவ்வொரு நாட்டின் சரித்திரத்திலும் ஒரு காலம் வருவதுண்டு. பாரத நாட்டின் சரித்திரத்தில் 1921 ஆம் வருஷம் அத்தகைய வருஷம். அந்த வருஷத்தில் காந்தி மகானின் தலைமையில் ஆயிரக் கணக்கான இந்தியர்கள் தியாகமாகிய வேள்வித் தீயில் குதித்தார்கள். சுயநலம் என்பதை அடியோடு மறந்து. “தாய்நாட்டுக்கே உழைக்க ஜன்மம் எடுத்தோம்” என்று பாடிக் கொண்டு சுதந்திரப் போரில் ஈடுபட்டார்கள். இதற்கெல்லாம் காரணமாக இருந்தது நாகபுரி காங்கிரஸ். (சேலம் விஜயராகவாச்சாரியாரின் தலைமையில் 1920ம் ஆண்டின் இறுதியில் நடந்த அந்தக் காங்கிரஸ், மகாத்

# பொன்னியின் புதல்வர்



சுந்தா

மாவின் மூன்று அம்ச ஒத்துழையாமைத் திட்டத்தை ஒருமனதாய் ஒப்புக் கொண்டது. அந்தத் திட்டத்தின்படி சட்டசபைகளைப் பகிஷ்காரம் செய்ய வேண்டியது, வக்கீல்கள் தொழிலை விட வேண்டியது, மாணவர்கள் கலாசாலைகளிலிருந்து விலக வேண்டியது.)

நாகபுரி காங்கிரஸ் முடிவடைந்தவுடனே 1921ம் வருஷம் பிறந்தது. பாரத மக்களை சுயராஜ்ய சுரம் பற்றிக் கொண்டது. ஜுரத்தின் வேகம் நாளுக்கு நாள் ஏறிக்கொண்டிருந்தது...

கல்கத்தாவில் ஸ்ரீ சித்தரஞ்சனதாஸும், அலகாபாத்தில் பண்டித மோதிலால் நேருவும் வக்கீல் தொழிலை நிறுத்தி விட்டதாக அறிவித்தார்கள். (சென்னையில் ராஜகோபாலாச்சாரியார் அவ்வாறே அறிவித்தார்.)... பிரபலமில்லாத பல வக்கீல்கள் — நூற்றுக் கணக்கானவர்கள் — தேசமெங்கும் தங்கள் தொழிலை விட்டு ஒத்துழையாமை இயக்கத்தில் சேர முன்வந்தார்கள்.

“மாந்தருக்குள் ஒரு தெய்வம்” என்ற நூலில் கல்கி மேலும் எழுதியிருப்பதாவது:

மூவகைப் பகிஷ்காரங்களில் இன்றொன்று கலாசாலை பகிஷ்காரம் அல்லவா? நாகபுரி காங்கிரஸுக்குப் பிறகு இந்தப் பகிஷ்காரமும் ஓரளவு பலன் தந்தது. கல்கத்தாவில் தேச பந்து தாஸ் விடுத்த விண்ணப்பத்தின் பலனாக ஆயிரம் பதினாயிரம் என்ற கணக்கில் மாணாக்கர்கள் கலாசாலையை விட்டு வெளியேறினார்கள். மார்ச்சு மாதம் நடக்க வேண்டிய பரீட்சைகள் பல கலாசாலைகளில் நடைபெறவே யில்லை.



ஆணையிட்ட அண்ணல்

கல்கத்தாவைப் போல் அவ்வளவு அதிகமாக இல்லா விட்டாலும் மற்ற மாகாணங்களிலும் பல மாணவர்கள் கலாசாலைப் பகிஷ்காரம் செய்தார்கள்.

இவ்விதம் பள்ளிக்கூடங்களையும் கலாசாலைகளையும் விட்டு வந்த மாணாக்கர்களில் ஒரு பகுதியார் தேச சேவைக்கே தங்கள் வாழ்க்கையை அர்ப்பணம் செய்தார்கள். முதலில் இவர்கள் காங்கிரஸ் பிரசாரத்தில் ஈடுபட்டார்கள். பிறகு கள்ளுக்கடை மறியல், விதேசி துணிக்கடை மறியல், சாத்வீக சட்ட மறுப்பு ஆகியவற்றில் ஈடுபட்டுச் சிறைக்கூடம் சென்றார்கள்.

வாலிபப் பிராயத்துக்கு உரிய ஆர்வத்துடனும் ஆவேசத்துடனும் தேசத் தொண்டில் ஈடுபட்ட அந்த ஆயிரக் கணக்கான மாணாக்கர்கள் பாரத நாட்டின் விடுதலைக்குப் பெரிதும் காரணமாயிருந்தார்கள்.

(அத்தியாயங்கள் 20, 21)

அவ்வித மாணுக்கர்களில் கல்கி ஒருவர்; மற்ருெருவர் அவருடைய நண்பர் முத்துக்கிருஷ்ணன். ஒத்துழையாமைத் திட்டத்தை அறிந்ததிலிருந்தே, அவர்கள் படிப்பை நிறுத்திக் கொள்வது பற்றி யோசிக்கலாஞர்கள். மாலே நேரங்களில் சந்தித்தபோதெல்லாம் அதைப் பற்றியே இருவரும் பேசிக் கொண்டார்கள். ''நான் படிப்பை விடுகிறேன்; நீ தொடர்ந்து படி'' என்று ஒருவருக்கொருவர் புத்திமதி சொன்ஞர்கள்.

''நீ பணக்காரப் பையன்; மேலே மேலே படிக்கவும், சீமைக்குப் போய்ப் படிக்கவும் கூட உனக்கு வசதி இருக்கிறது. ஆகவே நீ படிப்பை விடாதே!''- இப்படிக் கிருஷ்ணமூர்த்தி சொன்ஞன்.

''நான் பணக்காரஞய் இருப்பதால் தான் படிப்பை விட்டு விட வேண்டும் என்று நினைக்கிறேன்'' என்று முத்துக் கிருஷ்ணன் வாதித்தான். ''நான் மேலே படித்துப் பட்டம் பெற்று உத்தியோகம் செய்து சம்பாதிக்க வேண்டும் என்பதில்லே. உன் விஷயம் அப்படியல்ல. நீ படித்துத் தேறி வேலே பார்த்துக் குடும்பத்தைக் காப்பாற்ற வேண்டியவன். உன்னேயே உன் குடும்பத்தார் நம்பியிருக்கிருர்கள். அதனுலே நீ படிப்பை நிறுத்தவே கூடாது.''

இப்படி நாள்தோறும் அவர்கள் தர்க்கம் செய்து கொண்டும் புத்திமதி சொல்லிக்கொண்டும் இருக்கையில், டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன், அவர்கள் இருவரையுமே கல்விக் கூடத்தை விட்டு விலகும்படி செய்தார்.

டாக்டர் டி. எஸ். செளந்தரராஜன், லண்டனில் உயரிய வைத்தியத் தேர்ச்சிகள் அடைந்து, சில ஆண்டுகளுக்கு முன்ஞல் திருச்சிக்கு வந்து, சொந்த வைத்தியசாலே ஒன்றை நடத்திக்கொண்டிருந்தார். இங்கிலாந்தின் தலேநகரில் அவர் மூன்று ஆண்டு காலம் தங்கியிருக்கையில், புரட்சி தேசபக்தர்களான வ.வே.சு. ஐயருடனும், வீர ஸாவர்க்கருடனும் தோழமை கொண்டிருந்தார். தாய்நாடு திரும்புகையில், வைத்தியத் தொழிலே நடத்திக் கொண்டே தேச விடுதலேக்காகப் போராடுவது என்று உறுதி பூண்டார். மகாத்மா காந்தியின் ஒத்துழையாமைத் திட்டம் வெளியானதும், அதற்கு ஆதரவாகப் பிரசாரம் செய்வதில் டாக்டர் ராஜன் தீவிரமாய் ஈடுபட்டார்.

■ ''எப்போதும் எதிலும் முதலாக நிற்பவர்!''
— டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன்



■ அன்று வேங்கடராமனுக்குத் தாசில்தாரிடமிருந்து வந்த எச்சரிக்கை!






■ ''உடனே என்னேயும் இழுத்துக் கொண்டு டாக்டர் ராஜனின் பங்களாவுக்கு ஓடிக் கூப்பாடு போட்டு ரகளே செய்தாள் அம்மா!''

டாக்டர் ராஜன் எப்போதும் எதிலும் முதன்மையாக நிற்பவர்; பின்னால் நிற்பது அவரால் இயலாத காரியம்... வைத்தியத் தொழிலிலும் பணம் சம்பாதிப்பதிலும் அவர் எப்போதும் முதலாகவே இருந்தார். தேசிய இயக்கம் எதிலும் அவரை முதல் வரிசையில் காணலாம். தியாகத்துக்கும் கஷ்டப்படுவதற்கும் அவர் எப்போதும் முதலில் நிற்பார். மேடையில் நின்று பிரசங்க மாரி பொழிவதில் அவரை மிஞ்சுவோர் கிடையாது; பேச்சில் போலவே காரியத்திலும் முதன்மை வகிப்பார். எவ்வளவு பெரிய கூட்டமாய் இருந்தாலும் அதில் டாக்டர் ராஜன் இருந்தால் அவர்தான் முதன்மையாகத் தோன்றுவார். எல்லாருடைய கண்களும் அவருடைய கம்பீரமான அம்மை வடு முகத்தை நோக்கும். சமயம் வரும்போது சண்டை பிடிப்பதற்கும் அவர் பின்வாங்குவதில்லை. காலித்தனம் செய்ய வருகிறவர்களை ஒரு கை பார்த்துத்தான் விடுவார். பெரும்பாலும் அவருடைய அதட்டலிலேயே அவர்கள் மிரண்டு போவார்கள்.

மனிதர்களுக்குள்ளே ஒரு சிம்மம் என்று அவரைச் சொல்ல வேண்டும்.

ஒருவித முரட்டுக் காந்த சக்தி வாய்ந்த டாக்டர் ராஜனின் ஆளுமையை அப்படியே வர்ணிக்கும் கல்கியின் வாக்கியங்கள் இவை. 24–11–40 ஆனந்த விகடனில் வெளியான ஒரு கட்டுரையில் உள்ளவை.

அப்படிப்பட்ட ராஜன், ஏற்கனவே தேசபக்தியினால் பொங்கிக் கொண்டிருந்த கிருஷ்ணமூர்த்தியையும், முத்துக்கிருஷ்ணனையும், மற்றும் சில இளைஞர்களையும் படிப்பைத் துறக்கும்படி செய்ததில் வியப்பில்லை.

டாக்டர் ராஜன் பொழிந்த காந்தச் சொற்களே, தாம் பள்ளியை விட்டு வெளியேறக் காரணமாயிருந்தன என்பதை 1934ல் நடந்த இந்திய சட்டசபைத் தேர்தலில் அவருக்கு வோட் செய்யும்படி எழுதிய பிரசாரக் கட்டுரை ஒன்றில், நகைச்சுவையுடன் கல்கி தெரிவித்தார்:

...1921ஆம் வருஷ ஆரம்பத்தில் இவருடைய ஆவேசமுள்ள பிரசங்கங்களைக் கேட்டுத்தான் பள்ளிக்கூடப் புத்தகங்களைக் கட்டிக் காவேரியில் போட்டுவிட்டு நான் வெளிக் கிளம்பியது. என்னுடைய வாழ்க்கையில் இந்த மனிதர் மட்டும் பிரவேசித்திராவிட்டால் 'சிவனே' என்று பரீட்சையில் பாஸ் செய்து விட்டு உத்தியோக வேட்டையில் தலையிட்டிருக்கலாம். ஏதேனும் ஓரிடத்தில் வேலையில்லாத் திண்டாட்ட சங்கத்தின் காரியதரிசி வேலையாவது கிடைத்திராமல் போயிராது. உலகில் நல்ல தொழில்கள் எவ்வளவோ இருக்க, இந்தப் பொல்லாப் பத்திரிகைத் தொழிலில் ஈடுபட்டுச் சிரிப்பாய்ச் சிரிக்க வேண்டிய அவசியம் நிச்சயமாய் நேர்ந்திராது. (ஆனந்த விகடன் 10-4-34)

இதே விவரத்தைக் கல்கி இன்னொரு விதமாய், 1947ல் வெளியான ''நினைவு அலைகள்'' என்ற டாக்டர் ராஜனின் சுய வரலாற்று நூலுக்குத் தாம் எழுதிய முன்னுரையில் தெரிவித்தார்:

டாக்டர் டி. சே. சௌ. ராஜன் அவர்கள் என்னுடைய குருவும் தலைவரும் ஆவார். பிரிட்டிஷ் அதிகார வர்க்கத்துக்குத் தொண்டு செய்வதற்காகக் குமாஸ்தாக்களைத் தயாரிப்பதற்கென்றே ஏற்பட்ட கல்விமுறையை நான் பயின்று கொண்டிருந்த காலத்தில், என்னைப் பள்ளிக்கூடத்துக்கும் பரீட்சைக்கும் தலைமுழுகிவிட்டுத் தேசத் தொண்டில் ஈடுபடச் செய்தவர் டாக்டர் ராஜன். தீரத்துக்கும் செயல் திறமைக்கும் சொல்லின் ஆற்றலுக்கும் சுயநலமற்ற தியாகத் தொண்டுக்கும் நான் இலட்சிய புருஷர்களாய்க் கொண்டிருக்கும் ஒருசிலரில் டாக்டரும் ஒருவர்.

ஒரே நாளில் தத்தம் கல்விக்கூடத்தை விட்டு வெளியேறிய கிருஷ்ணமூர்த்தியும் முத்துவும் முன்பு ஒருவரையொருவர் தடுத்ததை மறந்து பாராட்

# நட்சத்திரமும் நவநாகரீகமும்

## லால்பாய் டெக்ஸ்டைல்ஸ்

உங்களுக்கென ஒரு பாக்ய நட்சத்திரம்...ஒரு நாகரீகம் உண்டு...இரண்டையும் சிறப்புடன் இணைப்பது—லால்பாய் டெக்ஸ்டைல்ஸ். பெருமைமிகு பிரிண்டுகள், அருமையான வண்ணங்கள்... பலவிதத் துணிவகைகள்.

தேர்ந்தெடுக்க 7 மடங்கு வகைகள் வேறு எங்குதான் கிடைக்கும்?





**விருச்சிகம்:**
நீங்கள் துணிவு மிக்கவர்: தன்னம்பிக்கையும் கட்டுப்பாடும் நிறைந்தவர். தேவையேற்படும்போது துணிந்து முன்னின்று செயலாற்றும் திறமை மிக்கவர். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்—பழுத்த சிவப்பு (மரூன்), ஆழ்சிவப்பு (க்ரிம்ஸன்). நாகரீகத்தையும் வண்ணத்தையும் சமமாக இணைக்கத் தெரிந்தவர் நீங்கள்.

**தனுர்:**
நீங்கள் மகிழ்ச்சி நிறைந்தவர், மலர்முகம் படைத்தவர். எப்போதும் சுறுசுறுப்புடன் விளங்குவீர். ஆயின் ஒரு சமயத்தில் ஒன்றே உமது குறிக்கோள். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்—கரும் பச்சை, ஊதா வண்ணம், பழுப்பு (ப்ரௌன்). நீங்கள் நவநாகரீகமாக உடுத்தத் தெரிந்தவர். ஆயின் எப்போதும் அதையே நாடுபவரல்ல.



**துலா:**
நீங்கள் பிறரைப் புரிந்து கொள்பவர்; இரக்க சிந்தனையுள்ளவர். நல்லுறவையும் நட்பையும் எப்போதும் நாடுபவர். உங்கள் அதிர்ஷ்ட வண்ணங்கள்—பச்சை, நீலம், வெளிர் சிவப்பு (பிங்க்), பழுப்பு (ப்ரௌன்). தருணத்திற்கேற்ற உடையைத் தேர்ந்தெடுப்பவர் நீங்கள்.

லால்பாய்—
அதிர்ஷ்டப் பொருத்தம் அளிப்போர்




ஏழு மில்களின் ஏற்றமிகு துணிகள்

CMLB-37.183 TM,

**சில்லறை விற்பனையாளர்கள்:**
M/s. வெங்கடேஷ், 243, 244, என்.எஸ்.ஸி. போஸ் ரோடு, சென்னை-1.
M/s. ஆனந்த் டெக்ஸ்டைல்ஸ், பெரிய கடை வீதி, திருச்சி-8.
M/s. ஜீவரீஸ், 26-பி, மேற்கு டவர் தெரு, மதுரை-1.

டிக்கொண்டார்கள். பொது நண்பர் ஆர். கே. சுப்பிரமணியமோ அவர்களுடைய செயலை ஒப்புக் கொள்ளாமல், ''ஐயோ! இப்படிச் செய்யலாமா?'' என்று கண்ணீர் விட்டு அழுதார்.

கிருஷ்ணமூர்த்தி பள்ளிக்கூடத்தை விட்டு ''ஓடிவிட்டான்'' என்ற செய்தி சித்தி தர்மி அம்மாளுக்கு எட்டியதும், மகன் 'சுப்புணி'யுடன் அவள் விழுந்தடித்துக் கொண்டு தேசியப் பள்ளிக்கு ஓடினாள். கணியூர் கிருஷ்ணய்யர் விடுதியில் விசாரித்ததில் பெட்டி படுக்கையுடன் கிருஷ்ணமூர்த்தி போய் விட்டான் என்று சொன்னார்கள். எங்கே போயிருப்பான் என்று கேட்டதில், டாக்டர் ராஜனின் வைத்தியசாலையில் அவன் ''ஒளிந்து கொண்டிருக்கிறான்'' என்று சக மாணவர்கள் சொன்னார்கள்.

''உடனே என்னையும் இழுத்துக் கொண்டு டாக்டர் ராஜனின் பங்களாவுக்கு ஓடி, கூப்பாடு போட்டு ரகளை செய்தாள் அம்மா'' என்று வி. சுப்பிரமணியம் (சுப்புணி) கூறினார்.

நன்றாகப் படித்துக் கொண்டிருந்த பிள்ளையை அவர் துர்ப்போதனை செய்து கெடுத்து விட்டதாக அவள் குற்றம் சாட்டினாள். ''எங்காத்துப் பிள்ளை எங்கே? அவனோடு பேசியாகணும்'' என்று கூப்பாடு போட்டாள்.

கிருஷ்ணமூர்த்தி அங்கே இல்லவே இல்லை யென்றும், ஆஸ்பத்திரி வாசலில் அப்படி யெல்லாம் கூச்சல் போடக்கூடாதென்றும், டாக்டர் ராஜன் கண்டிப்பாயும் கோபமாயும் சொல்லி அந்த அம்மாளைப் போகச் சொல்லி விட்டாராம்.

அந்தப் ''பொல்லாத'' டாக்டரைச் சபித்துக் கொண்டே வீடு திரும்பிய தர்மி அம்மாள், தன் கணவரிடம் நடந்ததை யெல்லாம் சொல்லி, புத்தமங்கலத்துக்கு அவசரமாய்க் கடிதம் எழுதச் சொன்னாள்.

அந்தக் கடிதம், புத்தமங்கலத்தில் வேங்கடராம அய்யரிடம் சேர்ந்த போது, திருச்சியிலிருந்தே வேறு இரு கடிதங்களும் அதனுடன் கிடைத்தன. அவற்றில் ஒன்று தேசியக் கல்லூரியின் முதல்வர், இராமானுஜாச்சாரியார் எழுதியது:

உங்கள் தம்பி கிருஷ்ணமூர்த்தி — இந்தப் பள்ளிக்கூடத்தில் ஒரு நட்சத்திரமாய் விளங்கியவன் — தேசிய இயக்கத்தில் சேர்ந்து, படிப்பை நிறுத்திக் கொண்டு விட்டான். அவனைப் பின்பற்றி மற்றும் பல மாணவர்கள் இப்படியே செய்து கொண்டு வருகிறார்கள். நீங்கள் உடனேயே இங்கே வந்து, நல்ல புத்தி சொல்லி, அவனைத் தொடர்ந்து படிக்கச் சொல்ல வேண்டும்.

இன்னொன்று தம்பியின் கடிதம்:

நம்முடைய வாழ்நாளில் நமக்கு வழிகாட்டியாய் இருந்து நம்மை நடத்திக் கொண்டு போகும் சர்வ வல்லமையுள்ள ஒரு சக்தி உள்ளது என்பது நீங்கள் அறியாதது அல்ல. நமது ஆசாபாசங்கள் எப்படி இருப்பினும் நாம் அச்சக்தியின் இஷ்டப்படியே நடக்க வேண்டியவர்களாக இருக்கிறோம்.

தற்காலப் படிப்பில் உள்ள குறைகள் எல்லாம் உங்களுக்குத் தெரியாததல்ல. இந்தப் படிப்பானது உற்றார் பெற்றோர்களிடத்தில் அலட்சியம் ஏற்படுத்துகிறது. தன்னம்பிக்கையைக் குறைக்கிறது. மொத்தத்தில் மனிதனை மிருகமாக்குகிறது. அனது பற்றி, நமது தேசத் தலைவர்களின் கட்டளைக்கு இணங்கியும், நன்றாகத் தீவிரமாக யோசித்துப் பார்த்தும் நான் பள்ளிக்கூடத்திலிருந்து விலகி விட்டேன். பிரின்ஸிபாலிடமிருந்து கடிதம் வரும். அதைப் பற்றிக் கவலையோ அவசரமோ படவேண்டாம். சாவதானமாய்த் தாங்கள் இங்கே வந்தால் போதுமானது.

சாவதானமாய் அல்லாமல், உடனேயே வேங்கடராமய்யர் திருச்சிக்குப் புறப்பட்டார். ஆனால் கோபத்துடனோ, தம்பியின் மனத்தை மாற்ற வேண்டும் என்ற எண்ணத்துடனோ அல்ல. தம்பியிடம் மட்டில்லா வாஞ்சை கொண்டிருந்தார் அவர். வாஞ்சையுடன், அவனுடைய புத்திசாலித்தனத்தை வியந்து கொண்டும், விவேகத்தை மெச்சிக் கொண்டும் இருந்தார். திருச்சிக்கு அவன் படிக்கப் போனபோது, தேசத்தில் நடந்த சம்பவங்கள் யாவும் அவனுடைய உணர்ச்சிகளை எப்படிப் பாதித்திருந்தன என்பதை விடுமுறைக்கு அவன் கிராமத்துக்கு வந்தபோதெல்லாம் அவனுடைய பேச்சிலிருந்து அறிந்திருந்தார். தேசபக்தி காரணமாய் அவன் படிப்பை விட்டது அவருக்கு உடன்பாடாகவே இருந்தது. உவப்பாகவும் இருந்தது என்றே சொல்லலாம். அய்யாசாமி அய்யருக்கும் ஓரளவு உடன்பாடாகவே இருந்தது. தாயார்தான் மிகவும் கலங்கி வருத்தப்பட்டாள். ''அவனை எப்படியாவது மறுபடியும் பள்ளிக்கூடத்தில் சேர்த்துவிடு'' என்று சொன்னாள். 'அவனோட மனத்தை மாற்ற முடியாது. எல்லாம் நல்லதுக்குத்தான் என்று நினைத்துக்கொள்' என்று அவளைச் சமாதானப்படுத்தினார் வேங்கடராமன்.

திருச்சி சென்று டாக்டர் ராஜனின் மனையை அவர் நெருங்கியபோதே, உள்ளே இருந்து கிருஷ்ணமூர்த்தி ஓடி வந்து அவரைக் கட்டிக் கொண்டான்.



**காதல் எங்கே?**

பி. எஸ். எம்.

அவள் ஓர் எழுத்தாளரின் மேல் மோகம் கொண்டிருந்தாள். கடிதங்கள் பரிமாறிக்கொள்ள விரும்பினாள். காதல் கடிதம் எழுத வரவில்லை. என்ன செய்வாள்?

"உனக்காக நான் எழுதித் தருகிறேன்" என்றாள் சிநேகிதி.

மனத்தைத் தொடும் காதல் கடிதங்கள் பல வரைந்து தள்ளினாள். இவ்வளவு அருமையான கடிதங்களை எழுதிய திறமையை வியந்து எழுத்தாளர் போற்றியபோது அவள் உண்மையை உடைத்து விட்டாள்!

"உங்களை இத்தனை நாள் கற்பனை உலகில் திரிய வைத்தது நான் அல்ல. என் சிநேகிதிதான்! அவள் தான் இந்தக் காதல் கடிதங்களை எழுதினாள்!" என்று மனமுடைந்து போய்க் கூறினாள் அவள்.

"அடேடே, அப்படியா?" என்று வியந்தார் எழுத்தாளர்.

"ஆமாம்! அவளை அழைத்து வரட்டுமா?"

"வேண்டாம்! அவளை ஏன் அழைத்து வர வேண்டும்?" என்று கேட்டார் எழுத்தாளர்.

"ஏன்? இத்தனை அற்புதமான காதல் கடிதங்களை எழுதிய அவளை நீங்கள் மணக்க விரும்பவில்லையா?"

"முட்டாள் பெண்ணே! எவனாவது டிக்ஷனரியை மணக்க முன்வருவானா? அழாதே! உன் அழகான முகம் கசங்கிவிடப் போகிறது!" என்றார் எழுத்தாளர்.

---

அவர் தம்பியை அன்புடன் தட்டிக் கொடுத்தார்.

"என்னை நீ கோபித்துக் கொள்ள மாட்டாய் என்று எனக்குத் தெரியும்."

"நீ அப்படி நினைத்தது எனக்குப் பெருமையா இருக்குடா" என்றார் அண்ணா.

"பாவம் அம்மாதான் ரொம்ப வருத்தப்பட்டிருப்பாள். இங்கே சித்தி வந்து ரகளை செய்தாள்."

"அம்மாவைச் சமாதானப் படுத்தியாச்சு. சித்தியிடம் நான் பேசிச் சமாதானப்படுத்துகிறேன். நீ எதற்கும் கவலைப்படாதே."

அண்ணாவின் பேச்சைக் கேட்டுத் தம்பி உருகிப் போனான். "ஒரு விதத்தில் எனக்கு வருத்தமாய்த்தான் இருக்கிறது. நான் படித்துத் தேறிச் சம்பாதித்துப் போடுவேன் என்று நீங்கள் எல்லாரும் நம்பி இருந்தீர்கள். இப்படி நான் மோசம் செய்து விட்டேன்."

"அதுதான் எதற்கும் கவலைப் படாதே என்று சொன்னேனே! குடும்பத்தைக் கவனித்துக்கொள்ள நானுச்சு ......அடுத்தபடியாக நீ என்ன செய்வதாக உத்தேசம்?"

"இப்போதைக்குக் காங்கிரஸ் பிரசாரம் செய்யப் போகிறேன். இங்கே காங்கிரஸ் ஆபீஸ் ஒன்று வைக்கப் போகிறார்களாம். அதில் சேர்ந்துகொள்ளலாம் என்று ஒரு யோசனை. டாக்டர் ராஜன் சொல்கிறபடி கேட்பேன்."

பணத்துக்குத் தம்பி என்ன செய்வான் என்ற கவலை அண்ணனுக்கு உண்டாயிற்று. அதுவரை கைச்செலவுக்கு மட்டுமே கொஞ்சம் அனுப்பி வந்தார். இனி முழுச் செலவுக்கும் அனுப்ப வேண்டியதாகுமே! குடும்பம் உள்ள நிலையில் தாம் அதிகமாய்ப் பணம் அனுப்ப இயலாதே என்று அவர் வருத்தத்துடன் தெரிவித்தார்.

"குடும்ப பாரத்தையும் தாங்கிக் கொண்டு நீ எப்படி அண்ணா எனக்குப் பணம் அனுப்ப முடியும்? அனுப்பினாலும் நான் வாங்கிக் கொள்ள மாட்டேன். காங்கிரஸிலிருந்தே சொற்ப ஊதியம் கொடுப்பார்கள். அதை வைத்துக் கொண்டு செட்டாகக் காலம் தள்ளுவேன்."

"இருந்தாலும் நானும் ஏதாவது கொஞ்சமாவது அனுப்பட்டுமா?" என்று அண்ணா கேட்டார்.

"கொஞ்சம் கூட அனுப்ப வேண்டாம். நான் பார்த்துக் கொள்கிறேன். நானும் சேர்ந்து வகிக்க வேண்டிய குடும்பப் பொறுப்பை நீ தனியாக வகிக்கிறாயே, அதுவே பெரிய காரியம்."

"எனக்கும் உன்னைமாதிரி தேச சேவை செய்ய வேண்டும் போல் ஆசையாய் இருக்கிறது. ஆனால் குடும்பம் இண்டாடுமே என்றிருக்கிறது."

"நான் தேச சேவை செய்ய நீ அனுமதிப்பதே ஒரு தேச சேவைதான்" என்றான் தம்பி. "நான் சொல்வதைக் கேள் ...நான் என்ன செய்யப் போகிறேனோ, என்னென்ன நடக்கப் போகிறதோ, தெரியாது. என்னவானாலும் நீ மட்டும் குடும்பத்தைத் தவிக்க விடாதே. தேச சேவைக்குக் குடும்பத்துக்கு ஒருவன் போதும்."

இப்படிச் சொன்னதோடு நில்லாமல், அண்ணனிடம் வாக்குறுதி கேட்டான் கிருஷ்ணமூர்த்தி. அப்படியே அண்ணாவும் வாக்களித்தார்.

ஆனால் அடுத்த ஆண்டில் தம்பி சிறையில் அடைபட்டதைக் கண்டு, மனம் பொறுக்காமல் அந்த வாக்கை மீறினார். தாம் கர்ணம் உத்தியோகம் வகிப்பதை மறந்து, அக்கம் பக்கத்துக் கிராமங்களில் தேசபக்திப் பிரசாரம் செய்தார். மேலதிகாரிகளுக்கு அந்தச் செய்தி எட்டவே, அவர்கள் அவரை விசாரித்து, விளக்கம் கேட்டு, கடுமையாய் எச்சரிக்கை செய்தார்கள்.

(தொடரும்)

“இடன் உடன்பிறந்தான் பெருமையைப் பெரிதாக மெச்சிக் கொண்டாயே, இப்பொழுது என்ன சொல்கிறாய்?”

கையில் கல்யாணப் பத்திரிகையும் கடிதமுமாகக் கேட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் சிவப்பிரகாசம்.

“என் உடன்பிறந்தானுக்கு என்ன குறைச்சலாம்?” என்று கேட்டாள் மங்களம்.

“என்னவா? அவன் எழுதியுள்ள கடிதத்தைப் படிக்கிறேன், கேள்! கடிதமே காரம்; அதிலே நமஸ்காரம் வேறு போட்டிருக்கு! அவரு மகன் நடராஜனுக்குச் சீயாழி பரமசிவத்தின் பெண் கல்யாணியை நிச்சயம் செய்துவிட்டாராம். தேதி குறிச்சுப் பத்திரிகையும் வைச்சுட்டாரு. நமக்குத் தபாலில் அனுப்பியிருக்காரு. நேரிலே வந்து பாக்கு வெத்திலே வெக்கிறதுக்குத் துப்பு இல்லே!” என்று அனலைக் கக்கினார் சிவப்பிரகாசம்.

மங்களத்துக்கு வாய் திறக்கத் தோன்றவில்லை.

“தேதி கிட்டத்திலேதான். இன்னிக்கே வேணுமானாலும் புறப்படு. என்ன இருந்தாலும் பிறந்த வீட்டுக் கல்யாணமாச்சே!” கக்கிய அனலில் குங்கிலியத்தையும் தூவினார்.

“ஆத்திரப்படுவதினால் ஆயிடுமா காரியம்? ஒருத்தன் பெண்டாட்டியை இன்னொருத்தன் கொண்டு போய்விட முடியாது. நம்ம சிவகாமுவுக்குன்னு ஒருத்தன் பிறக்காமலா இருக்கப் போறான்?” என்று கேட்டு மெதுவாக விஷயத்தைத் தொடர்ந்தாள் மங்களம்: “இரண்டு வருஷங்களுக்குமுன் என் அண்ணன் பெண் கேட்டு வந்தாரே, அப்போ நீங்க என்ன சொன்னீங்க?”

“என்ன சொன்னேன்?”

“இப்பவே என்ன அவசரம்? குழந்தை படிக்கிறா. படிப்பு முடிஞ்சு பார்த்துக்கலாமேன்னு சொல்லலியா?”

“சொன்னேன்! அதிலே என்ன தப்பு?”

“தப்புன்னு நான் எங்கே சொன்னேன்? உங்க நெஞ்சைத் தொட்டுச் சொல்லுங்க. அப்படிச் சொன்னப்போ, உங்க மனசிலே வேறு எந்தச் சிந்தனையும் ஓடலியா?”

“என் மனசை என்னவோ பெரிசா எடை போட்டு விட்டாப் போல் பேசறியே! என்ன எண்ணம் ஓடிச்சாம்?”

“அதை நான் வேறு விண்டு சொல்லணுமாக்கும்!”

“பெண்ணைப் பெத்தவன் பத்தும்தான் பார்ப்பான். அது ஒரு தவறு?”

“பிள்ளையைப் பெத்தவனும் அப்படிப் பார்க்கலாமில்லே?”

“ஒரு குட்டையிலேயே ஊறின மட்டைங்கிறது எவ்வளவு சரியா யிருக்கு, பாரு! அண்ணன் குணம் தங்கைக்கு அப்படியே படிஞ்சிருக்கு! — இப்படியெல்லாம் நீ பேசறதுக்குக் காரணம் எனக்குத் தெரியும். குஷாலாப் போயிட்டு வா, உன் அண்ணன் மகன் கல்யாணத்துக்கு. வேணுமானால் உன் பெண்ணையும்கூடக் கூட்டிக்கிட்டுப் போ!” என்று சினந்தார் சிவப்பிரகாசம்.

“தவறாக நினைக்காதே, சிவகாமு! ஒருத்தியின் கணவனை இன்னொருத்தி பறித்துக் கொண்டு போய்விட முடியாது. இதற்கு நீயும் நானுமே சான்று. பார்க்கப் போனால் அவர் உனக்கு உறவு முறை. நீங்கள் இருவரும் உளமாரக் காதலித்தீர்கள். உங்கள் காதலைப் பிரிக்கும் கருவியாக என்னை ஆக்கிவிட்டது விதி. விதி செய்த சதிக்கு நான் பொறுப்பாளி இல்லை. பெரியவர்கள் நிச்சயித்தபடி இந்தத் திருமணம் நடைபெறுகிறது. பெரிய மனசு பண்ணி எனக்கு நீ மணமகள் தோழியாக வர வேண்டும்; மாப்பிள்ளைக்கு மட்டும்தான் தோழன் என்பதில்லை என்பதை நிரூபிக்க வேண்டும். எனக்கு ஏமாற்றம் தரமாட்டாய்; கட்டாயம் வருவாய் என்று நம்புகிறேன்!”

கல்யாணியின் கடிதத்தைக் கையில் வைத்துக் கொண்டு, கடற்கரையிலே அமர்ந்திருந்த சிவகாமுவின் மனமும் கடலாகக் கொந்தளித்தது. “சீ! என்ன பெண் ஜன்மம் வேண்டிக் கிடக்கிறது! இவளும் ஒரு பெண் மாதிரி!” தோழி கல்யாணியைச் சாடின அவளது எண்ண அலைகள்.

‘நடராசன் உறவுமுறை என்பது ஒருபுறம் இருக்கட்டும். இருவரிடமும் காதலைக் கனிய வைத்தவள் இந்தக் கல்யாணியே அல்லவா? என்னை இந்தக் கடற்கரைக்கு அழைத்து வந்து, அவரையும் என்னையும் தனித்துப் பேசவிட்டு, எங்கள் காதல் அசடு வழிந்த பொழுது, காதல் கடலுக்கும் ஒரு கரை போட்டு ரசித்து மகிழ்ந்தவளாயிற்றே!.... அவளா இப்படிப் பெண் நாகமாக மாறி என்னைக் கடிக்க வருகிறாள்! விதி செய்கிற சதிக்கு நான் பொறுப்பாளி இல்லை என்கிறாளே! இவள் மட்டும் மனசு வைத்திருந்தால், இந்த விதியை என் பக்கம் திருப்பிவிட்டிருக்க முடியாதா? எங்கள் தூய காதல் அவளுக்குப் பொறுக்கவில்லை. எனவே, கூடி



# செய்தியில் விளைஞ்ச ……

யிருந்தே என் குடியைக் கெடுக்கத் துணிந்து விட்டான். அதற்குப் பெரியவர்கள் நிச்சயித்தபடி என்று அவர்கள் மேல் பழி போடுகிறான்.

பெயர்தான் கல்யாணியே ஒழிய, உண்மைக் காதலைக் கொன்று போட்ட கொலையாதகி. இவள்நன்றாயிருப்பாளா?

ஆமாம், இவளை மட்டும் சொன்னால் ஆயிற்றா? என்னைக் காதலிப்பதாக நடித்துத் திரிந்த அந்த அசடும் அல்லவா பல்லை இளித்துக் கொண்டு அவளை மணக்கச் சம்மதித்து விட்டது!

இந்தக் கல்யாணத்துக்கு நான் வரவேண்டுமாம்? ஆம், கட்டாயம் போகத்தான் வேண்டும்: ஒரு புறம் அருமைத் தோழி; இன்னொருபுறம் ஆருயிர்க் காதலர்! இருவரும் என்னை எப்படி மோசம் செய்துவிட்டுக் கல்யாணம் செய்து கொள்ளுகிறார்கள் என்பதைக் காணத்தான் வேண்டும். இருவரும் இரும்பு உலக்கையை விழுங்கினாற் போலக் காட்சி தருவார்கள்! அதைக்காணும் துணிவு எனக்கு இருக்குமா?'

''சிவகாமு!''

எண்ண அலைகளில் மிதந்து கொண்டிருந்தவள் துணுக்குற்றுத் தலை நிமிர்ந்தாள். எதிரே நடராசன் நின்று கொண்டிருந்தான்.

''என்னை மன்னித்துவிடு ! இரண்டு ஆண்டுகளுக்கு முன்பே என் அப்பா உன் அப்பாவிடம் பெண் கேட்டாராம். இந்த நாள் வரை உன் தந்தை இரும்பு உலக்கையை விழுங்கினாற் போல் இருக்கவே, 'உன்னை எனக்குத் திருமணம் செய்துதர விருப்பமில்லையாக்கும்' என்று தீர்மானித்து வேறு இடத்தில் பெண் எடுக்கத் துணிந்து முடிவு எடுத்துவிட்டார். இதில் ஒரு வேடிக்கையைப் பாரு, உன் உயிர்த் தோழியே எனக்கு மனைவியாக வாய்க்க இருக்கிறாள். பெண் பார்க்கும் படலத்தில், நாங்கள் இருவரும் மனம் விட்டுப் பேசிக் கருத்து ஒருமித்து ஒரு முடிவுக்கு வந்துள்ளோம்.''

''ஆதரவுபட்டதே இன்பம் என்று?''

''ஆமாம். அவள் சார்பிலும் என் சார்பிலும் அழைக்கிறேன். மறுக்காமல் தவறாமல் கல்யாணத்துக்கு நீ கட்டாயம் வரவேண்டும் !'' என்றான் நடராசன்.

சிவகாமுவுக்குப் பேச நா எழவில்லை.

'ஜே, ஜே' என்று கல்யாணக் கூடம் களைகட்டி விட்டது. பிள்ளை விட்டார்கள் வந்து விட்டார்கள். ஆனால் பெண்

ரா. வீழிநாதன்

விட்டார்களைத் தான் காணோம். சபாநாய கத்துக்குச் சந்தேகமாய்ப் போய்விட்டது. தனிமையில் தம் மனைவி மரகதத்தைப் பார்த் துக் காதைக் கடித்தார் : ''இன்னும் பெண் வீட்டாரைக் காணோமே ! உன் பேச்சைக் கேட்டுக் கெட்டேனே ! நாம் சொல்லி அனுப்பியதை அவர்கள் தவறாக எடுத்துக் கொண்டிருந்தால் . . . . .''

''இன்னொரு தரம் என் பேச்சை என்று சொல்லாதீர்கள். உங்கள் பிள்ளையின் பேச்சை என்று சொல்லுங்கள். சொல்லப் போனால் உங்களுக்கும் ஆசையா யிருந்தது. கேட்டு அனுப்பிவிட்டீர்கள்! இதுவரையில் நீங்கள் என் பேச்சைக் கேட்டிருக்கிறது எனக்குத் தெரியாது ?'' என்றாள் மரகதம்.

''அந்தப் பேச்செல்லாம் இப்போ எதற்கு? இப்போதைக்குள்ள பிரச்னைக்கு வழி சொல்லு!''

''பெண் கேட்கப் போன அன்றைக்கே பார்த்தேன். அவர்கள் கஹார்ப் போர்வழியா யிருந்தாங்க. 'உங்களுக்குச் சீர்செனத்தி என்ன வேண்டுமோ, அதை ஒரே மூச்சிலே கேட்டுடுங்க. அப்புறம் நினைத்து, நினைத்து, பன்னிப் பன்னிக் கேட்காதீங்க' ன்னு சொன் னாங்க. உங்களுக்கு உச்சி குளிர்ந்து போச்சு ! அப்பவும் இந்த மாதிரிதான் வந்து காதைக் கடிச்சிங்க. 'பொறுப்பை அவங்ககிட்டயே விட்டுட்டா நல்லாச் செய்வாங்க போல் இருக்கு. நாம் எதற்கு வீணிலே வாயைக் கொடுக்கணும்'னீங்க. நானும் சரிதான்னு 'கம்'முனு இருந்திட்டேன். அப்புறம் யாரு போதனையையோ கேட்டு, நீங்களும் உங்கள் பிள்ளையாண்டானும், அவங்க நல்லபடியாச் சீர்செனத்தி செய்யாமெ இருந்துட்டாங் கன்னு என்ன ஆகிறதுங்கிற ஐயத்தைக் கிளப்பிச் சீர் செனத்திக்கு லிஸ்டும் போட்டு அனுப்பிச்சிட்டீங்க. அவங்க அதைத் தப்பா நினைக்கலாம் இல்லே?''

''அப்படி நினைச்சு அவங்க கல்யாணத்துக்கு வராமல் வைச்சுட்டாங்கன்னு என்ன ஆகி றது? நம்ம மானம் கப்பலேறி விடாதா ?''

''அது இப்பத்தான் கப்பலேறியிருக்காக் கும்! உங்க தங்கச்சி பெண்ணைப் பிள்ளைக்குக் கல்யாணம் கட்டிக்கப் போறதாச் சொல்லிக் கிட்டிருந்த நீங்க அதை மாத்தினதுமே அது கப்பலேறிப் போச்சு ! உறவுமுறையை விட் டுட்டாரு பாரு, பணத்துக்கு ஆசைப்பட்டுக் கிட்டுன்னு ஊரெல்லாம் பேசுக் கிளம் பிடுச்சு !''

''இதோ, பாரு! இந்த இடக்குப் பேச்சுத் தான் வேண்டாங்கிறது ! நான் போய்ப் பெண் கேட்ட பொழுது அவங்க தர்றேன்னு எங்கே சொன்னாங்க ? அமாவாசை காத்துக் கிட்டிருக்குதா? ! என் மவனுக்கு எத்தனை நாட்கள்தான் கல்யாணம் கட்டாமல் இருக்கிறது என்கிறே !''

''என்கிட்டே எதுக்குப் பாய்கிறீங்க ? உங்க சம்பந்திக்கு ஆள் அனுப்பிச்சுப் பாருங்க, சீர் செனத்தி கேட்டது தப்புன்னு சொல்லிப் போடுங்க. நமக்கு இல்லாத சொத்தா, அவங்க கொடுத்து விடியறதுக்கு?'' என்றாள் மரகதம்.

''அதுக்காக அவங்க காலடியிலே போய் நிற்கச் சொல்றியா ? அது நடக்காது. இந்தச் சபாநாயகத்திடம். அவங்க வந்தாலும் வரா விட்டாலும், குறித்த முகூர்த்தத்திலே என் மவனுக்குத் திருமணம் நடந்தே தீரும்.''

''மவன் இருக்கான், சரி ! அதற்கு ஒரு மருமவப் பொண்ணு வேண்டாமா ?''

''ஏழையாயிருந்தால் என்ன, நம்ம முத்து சாமி மவளைக் கட்டிப்பிட்டா ?''

'' தாராளமாகக் கட்டலாம். ஆனால் குறித்த முகூர்த்தத்திலே நடக்காது. மூணு நாள் பொறுக்கணும். அப்புறம் முகூர்த்த நாள் குறிச்சு மேளதாளத்தோடு நடத்தி வையுங்க!'' விழிகளாலேயே விஷயத்தை விளக்கிவிட்டாள் மரகதம்.

''அதெல்லாம் முடியாது. நம்ம மதிப்பு என்ன ஆவது ? வச்ச முகூர்த்தத்திலே கல் யாணம் நடந்துடணும்!''

''அப்படியானால் நம்ம சிவகாமுவையே கட்டி வைச்சிடுங்க. உங்க குணம் தெரிஞ்சிருந் தும், உறவு முறையை விட்டுக் கொடுக்காமல்; மதிப்பைப் பார்க்காமல் அவங்க உங்க மகன் கல்யாணத்துக்கு வந்திருக்காங்க! உங்க மதிப்பைக் காப்பாற்ற அவங்களைவிட்டால் வேறு ஆள் கிடையாது !'' என்றாள் மரகதம்.

* * *

குறிப்பிட்ட முகூர்த்தத்திலே சிவகாமு — நடராசன் திருமணம் நடந்ததுகூட வியப் பில்லை. கல்யாணியின் வாழ்த்து மடல் வந் திருந்ததுதான் விசேஷம்:

''எங்கள் கல்யாணப் பத்திரிகையைப் பார்த்து என்னை எப்படித் திட்டித் தீர்த் திருப்பாய், உன் காதலரை எப்படி எடை போட்டிருப்பாய் என்பதெல்லாம் எனக்கு நன்றாகத் தெரியும். உன் தந்தையும் உன் மாமனும் எப்படி முரண்டு பிடிக்கிறார்கள் என்பதும், அதனால் உங்கள் காதல் திசை மாறி விபரீதக் கல்யாணமாகிவிடக் கூடும் என்பதும் உன் காதலர் வாயிலாகத் தெரிந் தது. எங்கள் பெற்றோர் சுபாவமும் எனக்கு அத்துபடி.. எனவே, ஒரு நாடகம் நடித்தேன். ஆனாலும் உன் கணவர் ரொம்ப அவசரக் காரர், அம்மா ! துளிக்கூடப் பொறுமை இல்லை. உன்னைத் திருமணம் செய்துகொண்டு விடத் துடித்தார். நாங்கள் போட்ட நாடகத் திலே நன்றாக நடித்தார். ஆனால், 'ஏ, ஒன்' நடிப்பு உன் மாமியார்தான்! உன்னை மருமக ளாக்கிக் கொள்ள அவள் போட்ட திட்டம் எத்தனை அழகு!

'' என் கதி என்னவென்கிறாயா ? எனக்கும் மனம் போல் மாங்கல்யம்தான். வைத்த முகூர்த்தத்தில் இங்கே எனக்கும் திருமணம் நடந்துவிட்டது. என் கல்யாணத்துக்கு நீ வர முடியாது, உன் கல்யாணத்துக்கு நான் வர முடியாது என்ற நிலையென்றாலும், ஒருத்தன் பெண்டாட்டியை இன்னொருத்தன் கொண்டு போக முடியாது என்பது உறுதியாயிற்றே ! அதைச் சொல்லு! உன் வாழ்த்துக் கடிதம் என் கல்யாணத்துக்கு வரவில்லையே என்ற தாபம் எனக்கு இல்லை. ஏனென்றால் உன் இதயம் இப்பொழுது வைதாரை வாழ்த்திக் கொண்டிருக்கும்!''

THE MOST WONDERFUL IDEAS GROW WITH COTTON

# TEXTURES



wool-feel...gay silky...cool lineny...
natural-only as cotton




**Century**-FOR 100% COTTON TEXTILES

THE CENTURY SPG. & MFG. CO. LTD., Bombay 400025

Adroit-CM-539-P

# செருப்பு பேசினால்...



ஒருவர் தமது அறை வாசற்படியைத் தாண்டும்போது கால் இடறிக் கீழே விழுகிறார். ''வாசற்படி தடுக்கி விட்டது; விழுந்து விட்டேன்'' என்கிறார்.

அப்போது, ''ஷட் அப்! நானா தடுக்கினேன்? நானா உன் காலைத் தட்டிவிட்டேன்? நீ ஏதோ குருட்டு யோசனையோ, இல்லுமல்லு யோசனையோ செய்து கொண்டு போனாயாக்கும், என் மேல் இடித்துக் கொண்டு விழுந்தாய். அதற்கு நானா ஜவாப்தாரி!'' என்று அந்த வாசற்படி (அதற்கு வாயிருந்து) சொன்னால் நாம் ஆச்சரியப்படுவதற்கில்லை. அது அப்



படிச் சொல்வது நியாயமும் ஆகும். அதைப் போல் இந்த வாரம் உங்களுடன் பேசுவது செருப்பு! கேளுங்கள் அது சொல்வதை:

செருப்பாகிய நான் ஒரு காலத்தில், நடக்கும்போது கால்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் வெறும் பாதரட்சையாக மட்டும் இருந்து வந்தேன். பிறகு மனிதர்களில் மூர்க்க வர்க்கத்தினர் எங்களை மனிதர்களின் தலையிலும் கன்னங்களிலும் உபயோகிக்கத் தொடங்கினார்கள். பிடிக்காதவர்களுக்குச் செருப்பு மாலை அணிவிக்கப் பலர் விரும்புவர். இது காரியசாத்தியமாகாதுபோனாலும் வேண்டாதவரின் படத்துக்காவது செருப்பு மாலை போடுவர். தண்டனை பெறும் கைதி நீதிபதிக்கு தன் பரிசாக எங்களை அனுப்பி வைப்பதும் உண்டு.

சூரத் காங்கிரஸின் போது எங்களுக்கு அரசியல் அந்தஸ்து ஏற்பட்டது. சூரத் நகரில் நடந்த அந்தக் காங்கிரஸ் மகாநாட்டில் அங்கத்தினர்களை நோக்கிப் பாயும் வாய்ப்பு எங்களுக்கு ஏற்பட்டது.

ஸ்ரீ ராஜ் நாராயணன் போன்ற பெரியவர்கள் நாங்கள் இருப்பதை ஒரோரு சமயம் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். அப்போது அவர்கள் கையிலிருந்து கொண்டு சட்டசபைத் தலைவர்களையும், அங்கத்தினர்களையும் நேருக்குநேர் தரிசனம் செய்யும் பாக்கியம் எங்களுக்குக் கிடைத்திருக்கிறது.

இந்த அக்டோபர் திங்கள் 15ந் தேதி நன்னாளில் கேரள சட்ட மன்றத்தில் தான் எங்கள் அபிலாஷை நிறைவேறியது.

திரு ஜி. வி. பணிக்கர் அவர்கள் தமது கால் செருப்பு ஒன்றை மட்டும் கழற்றிக் கையில் தூக்கிப் பிடித்துக் கொண்டு மந்திரிகள் உட்கார்ந்திருந்த இடத்தை நோக்கிச் சென்றது கண்கொள்ளாக் காட்சி.

திருவாளர் பினராயி விஜயன் என்ற மார்க்ஸிஸ்ட் அங்கத்தினருக்குக் குறி பார்க்கும் திறமை போதாது. அவர் காலில் இருந்த செருப்புக்கு உள்நாட்டு மந்திரியின் முகம் எப்படி இருக்கிறதென்று தொட்டுப் பார்க்க வேண்டும் என்பது ஆசை. அதற்குக் கொடுத்து வைக்கவில்லை! ஆனால் செருப்பு அதற்காகத் தன் பயணத்தை வீணாக்க விரும்பாமல் சபைத் தலைவரின் காரியதரிசியான திரு ஹனீபாவைக் குசலம் விசாரித்துவிட்டு விழுந்தது.

செருப்புக்கள் பட்சபாதமாக நடந்து கொள்ள விரும்பவில்லை என்பதை வற்புறுத்திக் கூற விரும்புகிறேன். ஒரு செருப்பு வேண்டும் என்றே திசை மாறிச் சென்று எதிர்க்கட்சியின் உதவித் தலைவரான திரு கே. எம். மணியின் முகத்தைப் பரீட்சை பார்த்து விட்டு வந்தது. நம்பூதிரிபாடு அவர்களிடம் ஆசாரசீலரான ஒரு காங்கிரஸ் கட்சி அங்கத்தினரின் பாதரட்சை சென்று ஆசீர்வாதம் செய்துவிட்டு வந்தது.

எங்களுள் பெண்களுக்குச் சம உரிமை கோருபவை சில இல்லாமல் இல்லை. திரு எம். வி. ராகவன் வீசிய செருப்பு அவர் விருப்பப்படி ஆண் பத்திரிகை நிருபர்களிடம் போகாமல் இரண்டு ஸ்திரீகளை நோக்கி விர்ரென்று சென்றது.

இத்தனை நடந்தும் ஒரு முறைகூட நாங்கள் பறந்த காட்சிகளைத் திரைப்படம் ஆக்கவில்லையே!

செருப்புக்கள் எனப்பட்ட நாங்கள் ஜனநாயகக் காலணிகள் ஆவோம். ஆகையால் எங்களை ஜனநாயகப் பிரதிநிதிகள் அடங்கிய சட்டசபையில் தாராளமாய் உபயோகிக்க அந்தப் பிரதிநிதிகளுக்கு உரிமை அளிக்கப்பட வேண்டும். அவசியமானால் அரசியல் அமைப்புச் சட்ட விதிகளையும் திருத்தலாம்.....

''என் புத்தியை ஜோட்டால் அடித்துக் கொள்ள வேண்டும்'' என்று அசட்டுத்தனமாய் நடந்து கொள்ளும் தமிழர்கள் சொல்வதுண்டு. சட்ட சபையில் எங்களை வீசும் அரசியல் அயோக்கிய விளையாட்டில் ஈடுபட்ட எம்.எல்.ஏக்கள் மேற்கூறியபடி எங்களைச் சுயப்பிரயோகம் செய்து கொள்ளவும் அனுமதி வழங்கலாம்!

**கிராம உத்தியோக பவன்களில் விற்கப்படும் அஹிம்சா செருப்பு சொல்லக் கேட்டு எழுதியது:**

**— அநாமதேயம்**



# 'டெபிலைஸ்ட்'

## துணிகளுக்கு ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது — சுருக்கம் விழாமலிருக்கின்றன

சுத்தமான பருத்தி துணிகளுக்கும் அல்லது காட்டன் சிந்தடிக் கலந்த துணிகளுக்கும் ''டெபிலைஸ்ட்'' ஒரு மகத்தான பலனைச் சேர்க்கிறது. சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது உங்கள் துணிகளுக்கு மிகக் குறைவான இஸ்திரி செய்வதுடன் பார்ப்பதற்கும் மிக அழகாக உள்ளது.

''டெபிலைஸ்ட்'' எனும் வியாபாரச் சின்னம் உலகப் புகழ் பெறுவதுடன் இந்தியாவில் உள்ள முதன்மையான மில்களான அரவிந்த், பின்னி, டி ஸி எம், பாம்பே டையிங், ஸ்ரீ அம்பிகா தாகர்ஸே, மற்றும் டாட்டா, மபத்லால் தயாரிக்கும் தரமான துணிகளுடன் திகழ்கின்றது.

நீங்கள் வாங்கும் ஒவ்வொரு மீட்டர் துணியிலும் TEBILIZED® மார்க் இருக்கிறதா என்று பார்த்து வாங்கவும்.




**TEBILIZED® சுருக்கம் விழாத தன்மைக்கென சோதிக்கப்பட்டது.**

® ரெஜிஸ்டர்ட் டிரேட் மார்க்கின் உரிமையாளர்கள்
**மேட்டூர் பியர்ட்ஸெல் லிட்.**
தபால் பெட்டி எண், 7, சென்னை-1.

SISTA'S-MBT-190-TAM-A

# 16. ஆணின் ஆணவம்

கருணாகரன் உற்சாகத்துடன் பந்தலில் நிரம்பியிருந்த கூட்டத்தில் பார்வையைச் செலுத்தினார். வக்கீல்களும், டாக்டர்களும், இன்ஜினீயர்களும், அரசாங்க அதிகாரிகளும் மாணவர்களும் நிரம்பி யிருந்தார்கள். பலருடைய பார்வை தம்முடைய பக்கமாக அடிக்கடி திரும்பியதை உணர்ந்த கருணாகரன், உள்ளூறக் கூசினார். அவரையும் மதுரத்தையும் ஒப்பிட்டுப் பார்த்துக் கேலியாகப் பேசுகிறார்களோ என்ற சந்தேகம் அவருடைய மனத்தைக் குடைந்தது. யாராவது அவர் இருந்த திசையைப் பார்த்துச் சிரித்தால்கூடத் தம்மைப் பார்த்துத்தான் சிரிக்கிறார்களோ என்று ஐயுற்றார்.

அவசரம் அவசரமாகக் கைக்குட்டையால் தம்முடைய முகத்தில் தோன்றியிருந்த எண்ணெய்ப் பசையைத் துடைத்துக் கொண்டார். எவ்வளவுதான் முகத்தை அழுத்தித் துடைத்தாலும் முகத்தை விகாரப்படுத்தி யிருந்த அம்மைத் தழும்புகளைப் போக்க முடியவில்லையே என்று வருந்தினார். பல இளைஞர்களுடைய கண்கள், மதுரத்தின்மீது படர்ந்ததைக் கண்டு மனம் கொதித்தார். அவளும் அப்படி யாரையாவது பார்க்கிறாளா என்பதை அறிய முயன்றபோது, அவள் சிங்காரத்தோடு தணிந்த குரலில் சிரித்துப் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டார். அவர்கள் பேசிக் கொண்டது கருணாகரனின் காதில் விழவில்லை என்றாலும், அவர்கள் இருவரும் ஏதோ ஒரு ரசமான விஷயம் பற்றிப் பேசுகிறார்கள் என்பதைப் புரிந்து கொண்டார்.

"இது என்ன சென்ட்? மணமாயிருக்கிறதே!" என்று மதுரம் கேட்டாள்.

"சென்ட் இல்லை, இது பௌடர். வெளிநாட்டிலிருந்து வந்தது" என்றான் சிங்காரம், பெருமையுடன். மதுரம் அவனுடைய முகத்தைப் பார்த்தாள். கால் அங்குலக் கனத்துக்கு முகத்தில் பவுடரை அப்பியிருந்தான்.

"வாசனை பிரமாதம்" என்றாள் மதுரம்.

"ஸீனியருக்கு இந்த வாசனை பிடிக்கவில்லை."

"உங்களுடைய ஸீனியருக்கு எதையுமே ரசிக்கத் தெரியாது. எனக்கு இந்த வாசனை ரொம்பப் பிடித்திருக்கிறது" என்று கூறியபடி மூச்சைப் பலமாக உள் இழுத்தாள். அவனுடைய முகத்திலிருந்த பவுடரை அவள் நாசியால் உறிஞ்சுவதாக அவனுக்குப் பிரமை. அந்த இனிய நிலையில் கிறங்கினான்.

"உங்களுக்கு ஒரு பௌடர் டின் தரட்டுமா?" என்று ஆவலோடு கேட்டான்.

"இருக்கிறதா?"

"இரண்டு வந்தது. உங்களுக்கு ஒன்று."

ஏற்றுக் கொண்டதற்கு அடையாளமாகத் தலையை அசைத்தாள், மதுரம். பிறகு, "உங்களுக்கு நிறைய வேலை போலிருக்கிறது.. கதைப் புத்தகங்களை கொடுத்துவிட்டு உடனேயே போய்விடுகிறீர்களே!" என்றாள். அவளுடைய கேள்வியில் தொனித்த அன்பும் அக்கறையும் சிங்காரத்தைக் கிறங்கவைத்தன.

"புத்தகங்களை ஸீனியரே வாங்கிக் கொண்டு விடுகிறார்" என்றான். அவனுடைய குரலில் தெரிந்த ஏமாற்றம் அவளுக்குப் புரிந்தது.

"நீங்கள் முன்பு கொடுத்த இரண்டு சிறுகதைப் புத்தகங்களையும் படித்து முடித்து விட்டேன். அவற்றைத் திரும்பப் பெற நீங்கள் வரவில்லையே?" என்றாள், மதுரம்.

"அதை ஸீனியர் என்னிடம் கொடுத்து விட்டாரே!"

"எப்போது?"

"இன்று காலையில் கோர்ட்டில் சந்தித்த போது கொடுத்தார். இனி கதைப் புத்தகங்கள் எதுவும் கொண்டு வர வேண்டாம் என்றும் சொன்னார்."

"ஓ.....!" மதுரத்தின் மனம் கோபத்தால் சீறியது. அவன், சிங்காரத்தைச் சந்தித்து விடக் கூடாது என்பதற்காகக் கருணாகரனே புத்தகங்களை எடுத்துக் கொண்டு போய்க் கொடுத்திருக்கிறார் என்பதைப் புரிந்து கொண்டதும் வெறுப்பினால் முகத்தைச் சுளித்தாள். ஓரக்கண்ணால் கருணாகரனைப் பார்த்தாள். அவர், அவளைத்தான் கண்காணிக்கிறார் என்பது தெரிந்ததும், அவ



னுடைய மனத்தில் வெறுப்பும் குரோதமும் கொந்தளித்தன.

"என்னைக் கண்காணிக்க இவருக்கு என்ன அருகதை இருக்கிறது?" — அவளுடைய பெண்மை வெகுண்டது. கருணாகரன், பார்த்துப் பொறுமை வேண்டும் என்ற எண்ணத்தில் இன்னும் சற்றுச் சரிந்து சிங்காரத்தை மிக நெருங்கித் தணிந்த குரலில் தான் படித்த புத்தகங்களைப் பற்றிப் பேசினான். சிங்காரமும் கள் குடித்த குரங்கு போல் இறங்கினான். அவனுடைய விகார உள்ளம் அவளுக்குப் புரியவில்லை. கருணாகரனிடம் ஒரு தவிப்பை ஏற்படுத்துவதில் தான் அவள் கருத்தாயிருந்தாள்.

"இந்தப் பயல் இங்கே ஏன் வந்தான்" என்று முனகியபடியே உள்ளூற மனம் பொறுமிக்கொண்டிருந்தார் கருணாகரன்.

**மா**லை ஆறு மணிக்கு வெளியீட்டு விழா தொடங்கியது. புத்தகத்தைக் கலெக்டர் வெளியிட்டார். பலர் புத்தகத்தையும், புத்தகத்தின் ஆசிரியையான கோமளத்தையும் புகழ்ந்து பேசினார்கள். சந்தானம் வானளாவப் புகழ்ந்தார். "தமிழ் இலக்கிய வானத்தில் கோமளம் சுடர் விடும் நட்சத்திரம்" என்று அவர் கூறியதும் பந்தலே அதிரும்படியாகக் கரகோஷம் எழுந்தது.

சிலர் கோமளத்தின் எழுத்தில் உள்ள துணிச்சலைப் புகழ்ந்தார்கள். யாரோ ஒருவர், "திருமதி கோமளம் அவர்கள் ஒரு பெண்ணாயிருந்தும் இவ்வளவு துணிவுடன் 'நியூவேவ்' பாணியைக் கையாண்டது மிகவும் வியக்கத்தக்கது" என்று பேசியபோது மதுரம் கோபத்தால் கொதித்தாள். சிங்காரத்திடமிருந்து ஒரு தாளையும் பேனாவையும் வாங்கித் தான் பேச விரும்புவதாக எழுதி, விழாத் தலைவரிடம் கொடுக்கும்படி அவனை ஏவினாள். சிங்காரம் அவள் இட்ட வேலையை உற்சாகமாகச் செய்தான். அதைக் கவனித்த கருணாகரன், "என்ன இதெல்லாம்?" என்று தணிந்த குரலில் கடிந்தார்.

"நான் பேசப் போகிறேன். உங்கள் ஜூனியரிடம் தலைவருக்குச் சீட்டுக் கொடுத்து அனுப்பினேன்."

"நீ ஒன்றும் பேச வேண்டாம்."

"நீங்கள் சும்மா இருங்கள். நான் பேசத்தான் போகிறேன்" என்று அவள் சொல்லிக் கொண்டு இருந்தபோது, கலெக்டர் அவளை மேடைக்கு வரும்படி சைகையினால் அழைக்கவே, அவள் உடனே எழுந்து மேடையை நோக்கி விரைந்தாள். கருணாகரன் செய்வதறியாமல் விழித்தார்.

மேடையில் மைக்கின் முன்னால் நின்ற மதுரம், முதலில் கோமளத்தின் கதைகளைப் புகழ்ந்து பேசினாள். பிறகு கோமளத்தைப் புகழ்ந்து பேசியவரின் பேச்சைத் தாக்கத் தொடங்கி விட்டாள். அவளுடைய உள்ளத்தில் கொந்தளித்துக் கொண்டிருந்த கோபம், வார்த்தைகளாகக் கொட்டத் தொடங்கி விட்டது. எல்லோரும் வியப்புடனும், பிரமிப்புடனும் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஆண்களிடம் இருக்கும் ஆணவத்தையும், அந்த ஆணவம், பெண்மையை எவ்வளவு



தாரம் அடிமைப்படுத்தி யிருக்கிறது என்பதையும் சொன்னாள். அவளுடைய பேச்சும் அவள் பேசிய பாணியும், பேசியபோது அவளது முகத்தில் தோன்றி மறைந்து கொண்டிருந்த உணர்ச்சிகளும் கருணாகரனை வதைத்தன.

அவள் பேசினாள்: ''ஆண் என்னும் ஆணவம், இன்று மட்டுமல்ல, புராண காலங்களிலிருந்தே தொடர்ந்து வருகிறது. சீதையைத் தீக்குளிக்க வைத்தானே, ராமன், அது பெண்ணை அடிமைப்படுத்தியிருந்த சமுதாயத்தின் செயலல்லாமல் வேறென்ன? அந்தச் செயலில் என்ன நியாயம் இருக்கிறது? சீதை மீது சந்தேகப்பட்டார்களே, அதே சந்தேகம் ஏன் ராமன் மீது தோன்றவில்லை? ராமனைப் பிரிந்திருந்த காலத்தில் சீதையின் கற்பைச் சந்தேகித்த சமுதாயம், சீதையைப் பிரிந்திருந்த காலத்தில் ராமனின் கற்பை ஏன் சந்தேகிக்கவில்லை? மனுநீதியையோ சமுதாயச் சட்டங்களையோ தள்ளி வைத்துவிட்டுத் தர்ம நியாயப்படி பார்த்தால், ராமன் முதலில் தீக்குளித்துத் தன்னைத் தூய்மையானவன் என்று மற்றவர்களுக்கு நிரூபித்துவிட்டுப் பிறகு சீதையைத் தீயில் இறங்கச் சொல்லியிருக்க வேண்டும். இல்லையென்றால் சீதை இறங்கி வெளியேறிய பிறகாவது அந்தத் தீயில் ராமன் இறங்கியிருக்க வேண்டும். இதுதான் தர்ம நியாயம். இதை ஏன் ராமன் செய்யவில்லை? ஒரு பெண்ணைச் சந்தேகிக்க ஆணுக்கு உரிமை உண்டென்றால், ஓர் ஆணைச் சந்தேகிக்க ஒரு பெண்ணுக்கும் உரிமை உண்டு.''

கூட்டத்தில் கரகோஷம் எழுந்தது. பெண்களிடமிருந்து உற்சாக ஆரவாரம் எழுந்தது. மதுரத்தின் பார்வை கருணாகரனைச் சாடியது. அவரைப் பார்க்கப் பார்க்க மதுரத்தின் கோபம் கிளர்ந்து கொண்டிருந்தது. தொடர்ந்து பேசினாள்: ''இந்த உரிமை ஏன் மறுக்கப்பட்டது? ராம ராஜ்யத்தில் ஓர் ஆண் என்னும் ஆணவம், பெண்மையை அடிமைப்படுத்தியிருந்ததுதான் காரணம். அதற்குப் பிறகும் ராமன் சீதையை ஏற்றானா? ராம ராஜ்யத்திலிருந்த எவனோ ஒருவன் அறியாமையால் ஏதோ சொன்னான் என்பதற்காகப் பூரண கர்ப்பிணியான சீதையைக் காட்டுக்கே துரத்தி விட்டானே, ராமன்? இது எந்த நீதியைச் சேர்ந்தது? உலகம் முழுவதையும் எந்தக் காலத்திலும் 'ஒத்தெல்லோ' மனப்பான்மைதான் ஆட்சி செலுத்தி யிருக்கிறது. அந்த மாதிரிப் பைத்தியக்காரர்கள் எந்தக் காலத்திலும் இருந்து கொண்டுதானிருக்கிறார்கள்'' என்று கூறிவிட்டு மின்னலெனப் பார்வையால் கருணாகரனை வெட்டினாள். அவருடைய முகம் அவமானத்தினால் கருங்குவதைக் கண்டு உற்சாகம் அடைந்தாள். தொடர்ந்து சொன்னாள்: ''பிரஜையின் எண்ணத்துக்கு மன்னன் மதிப்புக் கொடுக்க வேண்டும் என்றிருந்தால், ராமன் என்ன செய்திருக்க வேண்டும்? சீதையின் கௌரவத்தைக் காப்பாற்றத் தான் ராஜ்யத்தைத் துறந்திருக்க வேண்டும். அரச பீடத்தில் தம்பியை அமர்த்திவிட்டு அவரும் சீதையுடன் கானகத்துக்கு மீண்டும் போயிருக்க வேண்டும். ஆனால் ராஜ்யத்துக்காகச் சீதையை அல்லவா பலி கொடுத்தான், ராமன். ஒரு பெண்ணின் கௌரவத்தைக் காப்பாற்றுவது பெரிய விஷயமல்ல என்னும் எண்ணம்தானே இதற்கெல்லாம் காரணம்? யுகம் யுகமாகப் பெண் இனம் அடிமைப்பட்டேதானிருக்கிறது. இப்போது ஒரு நண்பர் இங்கே பேசினாரே, 'கோமளம் ஒரு பெண்ணாயிருந்தும் 'நியூவேவ்' பாணியைக் கையாண்டது வியக்கத்தக்கது' என்று. அதன் அர்த்தம் என்ன? ஆண் என்னும் ஆணவத்தால் வந்த பேச்சு அது. துணிவு என்பது ஆண்களுக்குத்தான் உண்டு, பெண்களுக்கு இல்லை, இருக்கக்கூடாது. ஆகையால், கோமளம் அவர்கள் அப்படி எழுதியது வியப்புக்கு உரியது என்ற அர்த்தத்தில்தானே அவர் பேசினார். ஒரு பெண்ணாயிருந்தும் என்றாரே. 'இருந்தும்' என்பதற்கு வேறு என்ன அர்த்தம்? ஆண் என்னும் ஆணவம், பெண்ணைப் பற்றி அவ்விதம் வியப்புடன் நோக்கச் செய்திருக்கிறது. 'நியூவேவ்' பாணியைக் கையாளும் திறமையோ, அருகதையோ, துணிவோ ஆணுக்கு மட்டுமே சொந்தமானவையா? அப்படி என்னும் மனப்பான்மை இருக்கப் போய்த்தான் 'பெண்ணாக இருந்தும்' என்று அவர் பேசினார். இந்த மனப்பான்மை இந்தச் சமுதாயத்தோடேயே யுகம் யுகமாக ஒட்டிக் கொண்டு வருகிறது. இந்த நூற்றாண்டிலாவது இதற்கு முடிவு காண வேண்டும்....''

மதுரத்தின் ஆவேசமான பேச்சு கூட்டத்தினரை ஆட்கொண்டிருந்தது. அவள் பேசியது அந்தக் கூட்டத்தாருக்காகவோ அல்லது சொற்பொழிவாற்றுவதில் தன் திறமையை வெளிப்படுத்தவோ அல்ல. அவள் பேசியவை அனைத்தும் அவளுக்கு எதிரே இருந்து கேட்டுக்கொண்டிருந்த கருணாகரனுக்காகத்தான். அவளுடைய ஒவ்வொரு வார்த்தையும் அவ



1. இந்தியா சிமெண்ட்ஸ் டி. எஸ். நாராயண சாமி அவர்களின் இல்லத்தில் மாதாஜி யோக சக்தி சரஸ்வதியால், யோக சக்தி மிஷன் தொடங்கப்பட்டது. உலகம் நமது குடும்பம், ஞானம் நமது உயிர் மூச்சு, சேவை நமது வழி பாடு-என்ற உயர்ந்த லட்சியங்களைக் கொண்டது இந்த மிஷன்.

2. சென்னை பரங்கிமலையில் செப்டம்பர் 3ந் தேதியிலிருந்து அக்டோபர் 7ந் தேதி வரை போலோ பந்தயங்கள் வெகு சிறப்பாக நடந்தன. ஜாம்பியாவிலிருந்து ஒரு போலோ குழுவும், பாரிஸ், பிரிட்டனிலிருந்து இரு சர்வதேச போலோ ஆட்டக்காரர்களும் கலந்து கொண்டனர். கடைசி நாளன்று குதிரை 'ஷோ ஜம்ப்' போட்டி மக்களை மிகவும் கவர்ந்தது. படத்தில் மேஜர் கலான், பிரிட்டனின் சர்வதேச ஆட்டக்காரர் ஜூலியன் ஹிப்வுட்டின் குதிரையை முந்த முயலும் காட்சியைக் காணலாம்.

ருடைய உச்சந் தலையில் ஓங்கி அடிப்பதுபோல் இருந்தது. பேசியபோது அவளுடைய கண்கள் கருணாகரனையே வட்டமிட்டன. அவளுடைய பேச்சைக் கேட்டுக் கூட்டத்தில் ஆரவாரம் எழுந்தபோதெல்லாம் அந்தக் கூட்டம் தம்மைத்தான் கேலி செய்கிறதோ என்று எண்ணிப் புழுங்கினார் கருணாகரன்.

அவள் பேசி முடித்ததும் கோமளம் எழுந்து அவளை அணைத்துக் கொண்டாள். மேடையிலிருந்து மதுரம் இறங்குவதற்குள் பல பெண்கள் அவளை வழிமறித்துப் புகழ்ந்தார்கள். சில இளைஞர்கள் அவளிடம் உற்சாகமாகப் பேசிப் புகழ்ந்ததைக் கருணாகரன் கண்டு பொறுமையால் வதங்கினார். தன்னைப் புகழ்ந்த இளைஞர்களிடம் முகம் மலரச் சிரித்து அவள் பேசிய காட்சி கருணாகரனின் நெஞ்சில் தீயாகத் தகித்தது. அந்தச் சமயங்களில் மதுரம் ஓரக் கண்ணால் அவரைக் கவனிக்கத் தவறவில்லை. அவர் கவனிக்கிறார் என்பதைத் தெரிந்து கொண்டு அவள் இன்னும் உற்சாகத்துடன் இளைஞர்களை நெருங்கிப் பேசினாள்.

தன்னுடைய இருப்பிடத்துக்கு அவள் திரும்பியபோது சிங்காரம், ''பிரமாதமாகப் பேசினீர்கள்'' என்றான். கைக்குட்டையால் கழுத்திலும் நெற்றியிலும் வழிந்த வியர்வையைத் துடைத்தவாறே நாற்காலியில் அமர்ந்தாள். நீதிபதி, அவளைப் பார்த்து ''பேச்சு பிரமாதம்'' என்றார். கருணாகரன் புன்னகை புரிந்தார். தம்முடைய மனைவிக்குக் கிடைத்திருக்கும் புகழை எண்ணி மகிழவும் முடியாமல், வெறுக்கவும் முடியாமல் திணறினார். எல்லோருடைய கவனத்துக்கும் அவள் ஆளாகி விட்டாளே என்ற நினைவு மனத்தில் உளைச்சலைக் கொடுத்தது. கூட்டத்தில் சிலர் தம்மைச் சுட்டிக் காட்டிப் பேசுவதைப் பார்த்தார். அந்தச் சூழ்நிலையில் பெருமைப்படுவதற்குப் பதிலாக மனம் வெதும்பிக்கொண்டிருந்தார். அவருடைய உள்ளத்தில் நிகழ்ந்து கொண்டிருந்த கொந்தளிப்பை அவருடைய முகத்திலிருந்து தெரிந்து கொண்டாள், மதுரம். ஒரு கணம் அவளுடைய பார்வை கருணாகரனின் பார்வையோடு மோதியது. மனைவிக்குக் கிடைத்திருக்கும் பெருமையை எண்ணி ஒரு கணவனின் மனம் இயல்பாகக் கொள்ள வேண்டிய மகிழ்ச்சியும், உற்சாகமும் அவருடைய பார்வையில் இல்லை என்பதைப் புரிந்து கொண்ட மதுரத்தின் உள்ளம் அழுதது. ஊமைத் துக்கத்தை வெளிக்காட்டாமல், சமாளித்தாள். புன்முறுவலை வலிய வரவழைத்துக் கொண்டாள். அவளுடைய இதயத்தில் பயங்கரப் பழி உணர்ச்சி கிளர்ந்தெழத் தொடங்கி விட்டது. (தொடரும்)

"புதுமையான பிளெண்டுகளிலே சுவையான காட்சி"

## பாம்பே டையிங்கின் எழில் விளக்கம்

எண்ணற்ற வண்ணக்
குவியல்களிலே
மூழ்கித் திளையுங்கள்.
பல நிறங்களிலும்
புத்தம் புதிய டிசைன்
களிலும் பாம்பே
டையிங்கின் ஸூப்பர்
ஃபைன் பாப்ளின்,
லான், கெம்ப்ரிக்
மற்றும் பாலியெஸ்டர்/
காட்டன் ப்ளெண்டு
கள். பாலியெஸ்டர்
மற்றும் காட்டன்
டெனிம்களில் கவர்ச்சி
கரமான 20 சாயல்கள்



காணத்
தெவிட்டாத
அரிய விருந்து!

# பாம்பே டையிங்

BD. 7211

# வளரும் குழந்தைகளுக்கு வாய்ப்பான துணை இன்க்ரிமின்*!




## இன்க்ரிமின்*

**இன்க்ரிமின் டானிக் வளரும் பருவத்தினருக்கு ஒரு வரப்பிரசாதம்**

Lederle

313 AS·INC·3068A TAM

Registered No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

பெண்மையைப்
பேணும்
பெண்களுக்கு

ஹிண்டன் ரிவர் மில்ஸ்
இந்தியாவிலேயே நவீனமான
டெக்ஸ்டையல்
மில்லில் தயாரித்தது.

சேலைகள்
DCM
TEXTILES
ரூபியாவும் புல்வாயிலும்